ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சாரிய ஸ்வாமிகளின்

# அருள் உரை






விகடன்
வெளியீடு

# ஸ்ரீ சங்கர சரிதம்



## திருமாலின் இதயத்தில் சிவநடனம்

நடராஜா போலவே த்யாகராஜாவும் நடனமூர்த்திதான். ஆனால் அது நமக்குத் தெரியாமல் அவருடைய பிம்பத்தில் முகம் தவிர பாக்கி எல்லா பாகமும் மூடி வைத்திருக்கிறது.

ஆனால் நடராஜாவின் நடனத்திற்கும் த்யாகராஜாவின் நடனத்திற்கும் வித்யாஸமுண்டு. நடராஜா அவராகவே இடது காலைத் தூக்கி ஆனந்த நடனம் செய்கிறார். த்யாகராஜா தாமாக டான்ஸ் பண்ணவில்லை. விஷ்ணுமூர்த்தியின் ஹ்ருதயத்தில் இருப்பவரல்லவா அவர்? அதனால் மஹாவிஷ்ணு ச்வாஸிக்கும்போது வருடைய வக்ஷஸ்தலம் ஏறியிறங்குவதற்கேற்ப த்யாகராஜா அசைவதில் தானாக ஒரு நடனம் அமைந்துவிடுகிறது.

மஹாவிஷ்ணுவின் ஹ்ருதய கமலத்தில் சிவன் நடனமாடுகிறார் என்பதைக் குறிப்பதாக ச்ருதியிலேயே 'நாராயணோபநிஷத்'தில் மந்த்ரங்கள் இருக்கின்றன. முதலில் நாராயணனே விராட் ஸ்வரூபம், விச்வத்திலுள்ள அத்தனை சிரஸுகளும், அத்தனை கண்களும் அவருடையதுதான் என்று ஆரம்பித்து அந்த விராட்டின் ஜீவரூபத்தில் தலைகீழான பத்மகோசம் (தாமரை மொக்கு) மாதிரி ஹ்ருதயம் இருப்பதைச் சொல்லி, அதன் மேல் பாகத்தில் உள்ள தஹராகாசம் என்பதில் பரமாத்ம ஸ்வரூபம் விளங்குவதாக வர்ணித்திருக்கிறது. வெளியிலே நாம் பார்க்கும் விசாலமான ஆகாசம் 'பேரம்பலம்' என்பது. அதுவே உள்ளே சின்ன ஆகாசமாக இருப்பதைத்தான் 'தஹராகாசம்' என்றும் 'சிற்றம்பலம்' என்றும் சொல்வது. 'ஞான ஆகாச'மான 'சித் அம்பரம்', ஆகாச க்ஷேத்ரம், சிற்றம்பலம் என்கிற சித்ஸபை, தாண்டவ மூர்த்தியான நடராஜசிவன் என்றிப்படி எல்லாம் சிதம்பரத்தில் ஒன்றுக்கொன்று ஸம்பந்தமுடைய ஆத்ம தத்வங்களாக இருக்கின்றன.

தாண்டவம் என்று பொதுவாகச் சொல்லப்படும் சிவ நடனத்திலேயே பல விதங்கள் உண்டு. சிதம்பரத்தில் ஆனந்தத்தாண்டவம், திருவாலங்காட்டில் ஊர்த்வதாண்டவம், இப்படி. இது தவிர சோழ ஸீமையிலேயே ஏழு த்யாகராஜாக்கள் ஏழுவிதமான தாண்டவங்களைச்

செய்கிறார்கள். ஸப்தவிடங்க க்ஷேத்ரம் என்று அந்த ஏழு க்ஷேத்ரங் களுக்குப் பேர். அவற்றில் ப்ரதானமானது திருவாரூர். அங்கேயுள்ளவர் தான் ஏழுபேரிலும் மூல த்யாகராஜா. அவர் ஆடும் நடனத்திற்கு ஹம்ஸ நடனம் என்று பெயர். அஜபா நடனம் என்றும் அதற்கு இன்னொரு பெயர்.

ஜபமாக இல்லாதது 'அஜபா'. மற்ற எல்லா மந்த்ரங்களையும் நாம் புத்தி பூர்வமாக அக்ஷரங்களைக் கொண்டு ஜபிக்கிறோம். அந்த மந்த்ர சப்தங்களின் அதிர்வினால் நாடியில் ஏற்படும் சலனங்களிலிருந்து அபூர்வமான தர்சனம், சக்தி, ஸித்தி, மனத்தெளிவு ஆகியன உண்டா கின்றன. இவை பூர்ணமாக ஏற்படுவதற்கு அந்த மந்த்ரங்களை ப்ராணா யாமபூர்வமாக, அதாவது தீர்க்கமாக மூச்சை இழுத்து, அடக்கி, வெளி யிடுவதோடு சேர்த்துப் பண்ண வேண்டும். இப்படி மந்த்ரம் என்று நாம் உத்தேசித்துப் புத்தி பூர்வமாக அக்ஷரங்களைக் கொண்டு பண்ணு வதென்றும், மூச்சையும் அவ்வாறே நாமாக உத்தேசித்து அளவாக ஒழுங்குபடுத்தி விடுவதென்றும் இல்லாமல், சித்தத்தைச் சாந்தமாக வைத்துக் கொண்டு, ச்வாஸமானது தானாக எப்படி அமைகிறது என்று, விலகியிருந்து, கவனித்துக் கொண்டிருந்தால் உள் – வெளிமூச் சுக்கள் ரொம்ப ரொம்பத் தீர்க்கமாகிக் கொண்டே போகும்; மூச்சு அடங்கியிருக்கிற காலமும் ஜாஸ்தியாய்க் கொண்டே போகும். ஆரம் பத்தில் ஏதோ நமக்குத் தெரிந்த மட்டும் சித்தத்தைக் கொஞ்சம் சாந்தப் படுத்திக் கொண்டு பண்ணினாலும் போகப் போகத் தானாக நிஜமான பரமசாந்தம் உண்டாகும். ப்ராணாயாமம் என்று அடக்கி, கிடக்கிச் செய்யும்போது இருக்கிற 'ஸ்ட்ரெயின்' கொஞ்சங்கூட இல்லாமல் அனாயாஸமாக இப்படி ஏற்பட்டுப் பரம சாந்தமாக மூச்சும் எண்ண மும் புறப்படுகிற ஆத்ம ஸ்தானத்தில் கொண்டு போய்ச் சேர்க்கும். இதிலே ஒரு மந்த்ர ஜபமுமில்லையல்லவா? அதனால் அஜபா' என்று பெயர்.

ஔபசாரிகமாக (உபசாரமாக) இதையும் ஒரு ஜபம் என்று சொல் வதுண்டு. அதுதான் 'ஹம்ஸ்' மந்த்ர ஜபம் என்பது. மூச்சு உச்வாஸ – நிச்வாஸமாக (உள்ளுக்குள் இழுப்பதும் வெளியில் விடுவதும்) உள்ள போது 'ஹம்', 'ஸ' என்ற ஒலிகளைப் போலவே சப்தசலனம் அமையும். அதனால்தான் 'ஹம்ஸ்' மந்த்ரம் என்பது. அதோடு 'அஹம் ஸ:' என்ப தற்கு 'நான் அவன்', அதாவது, 'ஜீவாத்மாவான நானே ஈச்வரன், அதா வது பரமாத்மா' என்று அர்த்தம். 'நானே அவன்' என்று மாத்திரம் நிறுத்திவிட்டால் ஜீவாத்மாதான் ஈச்வரன் என்று குறுக்கிவிட்டதாக விபரீத அர்த்தமும் செய்து கொள்ளலாமல்லவா? அதனால், '(பரமாத் மாவான) அவனே நான்' என்றும் சேர்த்துச் சொன்னால்தான் முழு சாகச் சொன்னதாகும். 'அவனே நான்' என்பது 'ஸ: அஹம்'. ஸந்தியில் இது 'ஸோஹம்' என்றாகும். 'ஹம்ஸ:' என்பதோடு 'ஸோஹம்' என்பதையும் சேர்த்துச் சொல்வதுதான் ஹம்ஸ மந்த்ரம். நாம் புத்தி பூர்வமாக உத்தேசித்து மற்ற மந்த்ரங்களைப் போல இந்த ஹம்ஸ மந்த்ரத்தையும் சொல்லிக் கொண்டே போனால்கூட, அதாவது ஜபித்துக் கொண்டே போனால்கூட, அந்தச் சப்த சலனங்கள்தான்

இயற்கையாகவும் சாந்த ஸமாதிக்கு அழைத்துப்போகும் ப்ராண ஸஞ்சாரத்திற்கு உரியதாக இருப்பதால், அந்த natural state-ல் சேர இதுவும் induce பண்ணும் (செயற்கையாகத் தூண்டிவிடும்). ஜீவாத்மா பரமாத்மாவுடன் அபேதமாயிருக்கும் சாந்தநிலைக்கு இந்த ஸாதனை அழைத்துப் போகும்போது ஒரு கட்டத்தில் ஜபம் நின்று 'அஜபா' வாகும்; ச்வாஸம் தன்னால் ஹம்ஸ மந்த்ரம் என்று ஔபசாரிகமாகச் சொல்வதுடன் நடக்க ஆரம்பிக்கும். 'ஸோஹம்' என்பதிலுள்ள 'ஸ'வும் 'ஹ'வும் தேய்ந்து தேய்ந்து ஒடுங்கிப் போய் 'ஓம்' என்ற ப்ரணவம் மட்டும் நிற்கும். அது அப்படியே போய் துரீயம் என்பதான உத்தம ஸ்திதியில், ஆத்மாவில் ஐக்யப்படுத்திவிடும்.

'யோக' நித்ரை என்று மஹாவிஷ்ணு குண்டலினிப் பாம்பை வெளியில் ஆதிசேஷ பர்யங்கமாகக் காட்டிக் கொண்டு தூங்குவது போல த்யானிக்கும்போது இந்த அஜபா ஸாதனைதான் பண்ணிப் பரமாத்மாவான பரமேச்வர ஸ்வரூபத்தில் ஐக்யப்பட்டிருக்கிறார். அப்போது அவரது ப்ராண ஸஞ்சாரத்துக்கேற்றபடி பரமேச்வரன் ஆடுவதுதான் த்யாகராஜாவின் அஜபா நடனம், அல்லது ஹம்ஸ நடனம்.

இதை ஒரு பிம்பமாக விஷ்ணுவின் ஹ்ருதயத்தின் மேலே ஈச்வரன் நாட்டியம் பண்ணுவதுபோலக் காட்டினால், ஜனங்களில் பெரும்பாலோராகவுள்ள விஷயம் தெரியாதவர்கள் தப்பாக நினைக்கும்படியாகும். முயலகனின் மீது நடராஜா ஆடுவது, பரமசிவனின் மார்மேலேயே காளி ஆடுவது ஆகியவை எப்படி சத்ருஸம்ஹாரமாகத் தெரிகின்றனவோ அப்படியே இதையும் நினைத்துவிடக்கூடும்! பேதமேயில்லை என்று ஒன்றாகப் போய்விடுகிற பரம மித்ரர்களான சிவ – விஷ்ணுக்களைப் பரம சத்ருக்களாக நினைப்பதாகிவிடும்!

இதனால்தான் திருவாரூர் பிம்பத்தில் எல்லாவற்றையும் நன்றாக மூடி, த்யாகராஜாவின் முகத்தை மாத்திரம் காட்டுவது.

ஒரு நாள் ஸாயங்காலம் விஷ்ணு இப்படி த்யானம் பண்ணி சிவ தாண்டவத்தைப் பார்த்து ரஸித்துக் கொண்டிருந்தார். ஹ்ருதய கமலத்தில் ப்ரஸன்னமாயிருக்கும் நடன மூர்த்தியின் ஸ்வரூபத்தைப் பார்த்ததில் அவருக்கு ஸந்தோஷம் தாங்கமுடியாமல் பூரிப்பு ஏற்பட்டது.

அந்தக் கனத்தை ஆதிசேஷனால் தாங்க முடியவில்லை.

அவர் விஷ்ணுவிடம், 'என்ன, இப்படி ஒரே பாரமாகிவிட்டீர்களே! என்னால் தாங்கமுடியவில்லையே! என்ன காரணம்?' என்று கேட்டார்.

அதற்கு விஷ்ணு, 'என் ஹ்ருதயத்தில் பரமேச்வரன் நர்த்தனம் பண்ணினார். அதுதான் பாரத்திற்குக் காரணம்' என்று பதில் சொன்னார்.

ஸந்தோஷத்தினாலேயே பாரம் என்கிறபோது அது அத்வைதம். ஈச்வரன் இவர் ஹ்ருதயத்தில் தோன்றியதால் பாரம் என்றால் இவர் ப்ளஸ் அவர் என்று இரண்டு பேர் சேர்ந்ததால் பாரம் என்பதாக த்வைதமாக அர்த்தம் கொடுக்கிறது. அத்வைதமாகப் பண்ணிக் காட்டி

யதைத் திருவாரூரில் முக்காலே மூணு வீசம் மூடிவைக்கும்படியாகி விட்டதல்லவா? அதனால், பொது ஜனங்களுக்கு அவர்களுக்குப் புரிவதான த்வைதமாகக் காட்டித்தான் அப்படியே அத்வைதத்திற்கு அழைத்துக் கொண்டு போக வேண்டும். ஆதிசேஷனின் மூலம் இதைப் பண்ண வேண்டும்' என்று பகவான் நினைத்தார். அதனால்தான் இப்படிச் சொன்னார். இப்படிச் சொன்னால் ஆதிசேஷன் என்ன கேட்பார் என்று அவருக்குத் தெரியும்.

அவர் நினைத்தது போலவே ஆதிசேஷன், 'அப்படிப்பட்ட ஈச்வர தாண்டவத்தை நான் பார்க்க வேண்டுமே!' என்றார்.

அதற்குத்தான் பகவான் காத்துக் கொண்டிருந்தார். மூடி மறைத்துக் கொள்ளாமல் நன்றாகத் தாண்டவமாடுவதாக வெளியில் தெரிகிற நடராஜ மூர்த்தியிடம் பதஞ்ஜலியை அனுப்பி, அவருடைய பக்தி விசேஷத்தினால் சிதம்பர க்ஷேத்ரத்திற்கு மேலும் கீர்த்தி ஏற்படச் செய்து, எல்லா ஜனங்களும் வந்து கண்ணாற தர்சனம் பண்ணி, தர்சனத்தினாலே முக்திபெறச் செய்ய வேண்டுமென்பதுதான் அவருடைய ஆசை.

திருவாரூரில் பிறந்ததால் முக்தி: 'ஜநாத் கமலாலயே'. பிறப்பது நம்மிஷ்டம் இல்லை! சிதம்பரத்தில் தர்சன மாத்திரத்தில் முக்தி: 'தர்சநாத் அப்ர ஸதஸி'. எங்கே பிறந்தவரானாலும் அங்கேபோய் தர்சனம் பண்ணி மோக்ஷத்திற்குப் போய்விடலாம். த்வைதமான தர்சனத்தினாலேயே அத்வைதமான மோக்ஷம்! பதஞ்ஜலியின் மூலம் சிதம்பர மஹிமையை ப்ரகாசிக்கச் செய்து ஸர்வஜனங்களுக்கும் மோக்ஷோபாயம் காட்ட பகவத் ஸங்கல்பம் ஏற்பட்டது.

மஹாவிஷ்ணு பதஞ்ஜலியிடம், 'சிவ தாண்டவம்தானே பார்க்கணும்? பாரத வர்ஷத்தில் தக்ஷிண தேசத்தில் தில்லைவனத்தில் சிதம்பர க்ஷேத்ரம் இருக்கிறது. அங்கே சிவன் நடராஜாவாக ஆனந்தமாக ஆடிக் கொண்டிருக்கிறார். போய் தர்சனம் பண்ணிக் கொள்' என்று சொல்லி அனுப்பிவைத்தார்.

இவருடையவும் ஜனங்களுடையவும் ஆத்ம க்ஷேமத்திற்காக மட்டும் அனுப்பி வைக்காமல் அறிவு விஷயமாகவும் பூலோகமே உபகாரம் பெறும்படியாக இன்னொரு பெரிய கார்யத்தையும் கொடுத்தார். 'நடராஜாவின் டமருக நாதத்தைக் கொண்டு பாணினி வ்யாகரண ஸூத்ரம் செய்திருக்கிறார். அதைப் புரிந்து கொள்ள மஹா மேதாவி களைத் தவிர மற்ற எவராலும் முடியாமலிருக்கிறது. ஆகையால் தேவபாஷையான ஸம்ஸ்க்ருதத்தின் அந்த வ்யாகரண ஸூத்ரங்களை நன்றாகப் புரியவைத்து பெரிய பாஷ்ய புஸ்தகம் எழுது' என்றும் ஆஜ்ஞாபித்தார்.

தூங்குகிற மஹாவிஷ்ணுவுக்குப் பாம்புப் படுக்கை. அவர் உட்கார்ந்தால் அந்தப் பாம்பே ஸிம்ஹாஸனமாகிவிடும். நடந்து போனாரானால் குடை பிடிக்கும். ஆனால் மஹா விஷ்ணு நாட்யம் ஆடுவதில்லை. சிவன்தான் ஆடுகிறவர். ஆடுகிறவருக்குப் பாம்பு எந்த விதத்தில் பணி செய்ய முடியும்? ஆபரணமாக அவர் உடம்பிலேயே நெளிந்து

கொண்டு அலங்காரப் பணி செய்கிறது! ஈச்வரன் மேலே பல பாம்பு கள் நெளிகிறபோது, அவருடைய பாதத்தில் சிலம்பாகச் சுற்றிக் கொள்ள ஆதிசேஷன் போனார்.

ஆதிசேஷப் பாம்பு பதஞ்ஜலி மஹர்ஷியாக அவதாரம் செய்து நடராஜாவிடம் போய்ச் சேர்ந்தது. அதனால் மஹாவிஷ்ணுவுக்கு சேஷபர்யங்கம் இல்லாமல் போய்விட்டதென்று அர்த்தம் பண்ணிக் கொள்ளக் கூடாது. ஆதிசேஷன் அங்கேயும் இருந்து கொண்டே தம்முடைய அம்ச கலைகளினால் பூமியில் ஓர் அவதார ரூபம் எடுத்தார்.

அத்ரி மஹர்ஷியின் புத்ரராகப் பதஞ்ஜலி அவதரித்தார். அதனால் ஆத்ரேயர் என்று அவருக்கு ஒரு பெயர். (ஆசார்யாளும் ஆத்ரேய கோத்ரம்தான் என்று பார்த்தோம்.)

கோணிகா புத்ரர் என்றும் அவருக்கு ஒரு பெயர். சில புராணங் களை அனுஸரித்துப் 'பதஞ்ஜலி சரித'த்தில் அவர் கோணிகா என்ற தபஸ்வினிக்குப் புத்ரராகப் பிறந்த கதையைச் சொல்லி, அதிலிருந்தே 'பதஞ்ஜலி' என்ற பெயர் ஏற்பட்டதற்குக் காரணமும் சொல்லியிருக் கிறது.

கோணிகா அஞ்ஜலி முத்ரையுடன் கூடிய கையில் அர்க்யஜலத்தை வைத்துக் கொண்டு ஸூர்ய பகவானிடம் தனக்கு மஹாத்மாவான புத்ரனை அருளுமாறு வேண்டிக் கொண்டிருந்தாள். அப்போது ஆகா சத்திலிருந்து ஆதிசேஷன் அந்த அஞ்ஜலி ஹஸ்தத்தில் விழுந்து அவதாரம் எடுத்தார். 'பத்' என்றால் 'விழுவது'. அஞ்சலி ஹஸ்தத்தில் விழுந்ததால் அவருக்குப் 'பதஞ்ஜலி' என்று மாதா பெயர் வைத்தாள் – இப்படிப் ('பதஞ்ஜலி விஜய'த்தில்) பெயருக்குக் காரணம் சொல்லி யிருக்கிறது.

சரகர் என்றும் அவருக்கு ஒரு பெயர்.

அவர் ஆசைப்பட்டு ஜன்மா எடுத்தது நடராஜ தாண்டவம் பார்ப் பதற்காக. அந்த ஆசை பரிபூர்ணமாக நிறைவேறிற்று. சிதம்பரத்தில் வாஸம் செய்துகொண்டு. நடராஜாவை ஸதா கால தர்சனம் பண்ணி, அவருடைய முக்யமான இரண்டு பக்தர்களில் ஒருத்தராகிவிட்டார்.

இவருடைய ஆசை நிறைவேறுமாறு இவரை அனுப்பி வைத்த விஷ்ணுவுக்கு இவர் மூலமாக லோகோபகாரமான அறிவுப் பணியும் நடக்க வேண்டும் என்பதல்லவா ஆசை? அந்த ஆசையும் நன்றாக நிறை வேறியது – பதஞ்ஜலி தேவபாஷைக்கு வ்யாகரண மஹாபாஷ்யம் எழுதினார். அவருக்கு அது மிகவும் ப்ரஸித்தியைக் கொடுத்தது.

அவருடைய லோகோபகாரத் தொண்டு அதோடு முடிந்துவிட வில்லை. மனோ-வாக்-காயம் என்று மூன்று சொல்கிறோமல்லவா? மூன்றுக்குமே பரமோபகாரம் பண்ணுவதான மூன்று ஆதார சாஸ்த்ரங் களை இயற்றிக் கொடுத்த ஒருவர் உண்டென்றால் அது பதஞ்ஜலிதான்! இது அவருடைய தனிப்பெருமை! இப்படி த்ரிகரண சுத்திக்கும் அவர் பெரிய உதவி செய்திருப்பதைச் சொல்லி, அவருக்கு நமஸ்காரம் தெரி

விக்கும் ச்லோகம் இருக்கிறது:

*யோகேந சித்தஸ்ய, பதேந வாசாம்,*
*மலம் சரீரஸ்ய ச வைத்யகேந ।*
*யோ (அ)பாகரோத் தம் ப்ரவரம் முநீநாம்*
*பதஞ்ஜலிம் ப்ராஞ்ஜலி - ராநதோஸ்மி ॥*

'மும்மலம் அறுப்பது' என்று சைவர்கள் ஓர் அர்த்தத்தில் சொல்கிறார்கள். பதஞ்ஜலியும் இன்னொரு அர்த்தத்தில் 'மும்மலம் அறுப்ப'தற்கே மூன்று துறைகளில் புஸ்தகங்கள் எழுதியிருக்கிறார்.

மலம் என்றால் அழுக்கு. அது மனஸ், வாக்கு, காயம் மூன்றுக்கும் ஏற்படக்கூடியது. அழுக்கு இருப்பது இந்த மூன்றுக்கும் ரோகம். அது போனால்தான் ஆரோக்யம். டாக்டர் கேட்கிற முதல் கேள்வி விஸர்ஜனமாயிற்றா என்பதுதானே?

மனஸுக்கு ஏற்படுகிற மலம் தப்பான சிந்தனைகள். அது போனால்தான் ஈச்வரானுபவம் கிடைக்கும்.

சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி என்று மாணிக்கவாசகர் சொல்கிறார்.

தப்பான சிந்தனை மட்டுமே மலம், நல்ல சிந்தனை என்பது அமலமான ஸத்வஸ்து என்று ஆரம்ப நிலைகளில் இருக்கும். அப்புறம், 'தப்பானது, நல்லது என்ற பேதமில்லாமல் சிந்தனை என்றும், சித்தம் என்றும், மனஸ் என்றும் ஒன்று இருப்பதே மலம்தான். மாயையால் ஆத்மாவுக்கு ஏற்பட்ட அழுக்குதான் மனஸ். அதனால் எதையுமே சிந்திக்காதபடி மனஸை அழித்துப் போட்டால்தான் ஆத்மானுபவம் ஏற்படும்' என்று தெரியும். 'சித்த மலம்' என்று மாணிக்கவாசகர் சொல்லும்போது இப்படித்தான், சித்தத்துக்கு ஏற்படும் தப்புச் சிந்தனையான மலத்தைச் சொல்லாமல், சித்தத்தையே ஆத்மாவுக்கு ஏற்பட்ட மலமாகச் சொல்லியிருக்கிறார். அந்த மலம் ஈச்வரானுக்ரஹத்தில் அகன்று சிவமாவதுதான் ஆத்ம ஸ்வரூபமாக நிற்பது.

சித்த மலம் போக நன்றாக அலம்புவதற்கு ஏற்பட்டதே யோகம். **யோகேந சித்தஸ்ய** என்று ஆரம்பித்திருப்பது இதைத்தான்.

யோக ஸாதனைக்கு ஆதார நூலாக உள்ள 'யோக ஸூத்ர'த்தை எழுதியதே பதஞ்ஜலிதான். அதனால் 'பாதஞ்ஜல யோக ஸூத்ரம்' அல்லது வெறுமனே '**பாதஞ்ஜலம்**' என்று மட்டுமே அது சொல்லப்படுகிறது.

மனஸை அடக்கிப் பரமாத்மாவோடு சேர்க்கை ஏற்படுத்தித் தருவதாலேயே அதற்கு **யோகம்** என்று பெயர்.

இன்றைக்கும் மேல்நாட்டினர் உள்படப் பலர் சாஞ்சல்ய மயமான ஸம்ஸார வாழ்க்கையிலிருந்து சாந்தியைத் தேடிக் கொண்டுபோய், 'Yoga'தான் இதற்கு ஸரியான வழி என்று பின்பற்றுவதைப் பார்த்திருக்

கிறோம். அதற்கான கார்ய க்ரமத்தை ரொம்பவும் நுணுக்கமாக, scientific-ஆகப் பதஞ்ஜலியின் ஸூத்ரத்தில் விளக்கியிருப்பது என்று கொண்டாடுவதையும் கேட்கிறோம்.

பலவிதமான யோகங்கள் இருந்தாலும் பதஞ்ஜலி ஏற்படுத்தியதற்கே ராஜ யோகம் என்று பட்டம் கொடுத்திருக்கிறது.

இது அவர் பண்ணிய தலையான பணி. ஜீவாத்மாவைப் பரமாத் மாவோடு சேர்த்து வைக்கிற பணி. த்ரிகரணங்களில் இது மனஸ் என்ப தற்கு பண்ணியது: 'யோகேன சித்தஸ்ய'.

அடுத்தது வாக்(கு).

அதற்காகத்தான் வ்யாகரண மஹாபாஷ்யம். முன்னேயே சொன்ன விஷயம்.

பதேந வாசாம் என்று சொல்லியிருப்பது இதைத்தான்.

'சித்த மலத்தை யோக ஸூத்ரத்தாலும் (யோகேந சித்தஸ்ய), வாக்கின் மலத்தை மஹாபாஷ்யத்தாலும் (பதேந வாசாம்) போக்கி னார் (அபாகரோத்)' என்று சொல்லியிருக்கிறது.

'யோகேந' என்று (யோகத்தைச்) சொன்னதுபோல 'வ்யாகரணேந' என்று (வ்யாகரணத்தைச்) சொல்லவில்லையே – என்று தோன்றலாம். 'பதேந' என்று சொல்லியிருக்கிறதோல்லியோ? 'பதம்' என்றாலே வ்யாகரணம், இலக்கண சாஸ்த்ரம் என்று அர்த்தம். 'பதானுசாஸனம்' என்று நீட்டியும் சொல்வார்கள். பதம் என்றாலே போதும். 'பதம் வ்யாகரணம் ப்ரோக்தம்': இலக்கண நூல் 'பதம்' என்று கூறப்படுகிறது. இலக்கணம் எதற்கு? பாஷையை ஒழுங்குபடுத்தி விதிகளைத் தருவதற் காகத்தான். பாஷை என்பது சொற்களைத்தானே தாய்ச் சரக்காகக் கொண்டது? சொல்தானே பதம்? அதனால் பதம் என்றாலே இலக்கணந்தான்.

ஸம்ஸ்கிருதப் புஸ்தகங்கள், சாஸனங்கள் முதலானவற்றில் பெரிய வர்களாக இருப்பவர்களைக் குறிப்பிடும்போது அவர்களுடைய குடும் பப் பெரியவர்கள், வம்சம், ஆசார்யர், அவர்கள் இருந்த இடம் ஆகிய வற்றின் பேரையும் (எல்லாவற்றையுமோ, சிலவற்றையோ) சொல்லி அந்தப் பெரியவரைக் குறிப்பிடும்போது, 'இதி ஸ்ரீமத் பத-வாக்ய -ப்ரமாண-பாராவார-பாரீண' என்று நீளமாக ஓர் அடைமொழி கொடுத்திருக்கும். நிஜமாக ஒருவர் வித்வத்தில் பெரியவராக இருந்தால் அவர் இந்த அடைமொழிக்குத் தகுதி பெற்றிருக்க வேண்டும்; பெற்றும் இருப்பார்!

'பத-வாக்ய-ப்ரமாண' என்பதில் 'பதம்' என்றால் வ்யாகரணம் தான். 'வாக்யம்' என்றால் மீமாம்ஸை, அதாவது பூர்வ மீமாம்ஸை. மீமாம்ஸா சாஸ்திரம் வேத வாக்யங்களை எடுத்துக் கொண்டு அலசி அலசி அர்த்தம் விசாரிப்பதால் 'வாக்யம்' என்று அதற்கே பேர். 'ப்ரமாணம்' என்பது ந்யாயம், அதாவது தர்க்க சாஸ்திரம். இதனால் இது இப்படி என்று ப்ரமாணங்களைக் காட்டிக் காட்டியே அது விதிகளை வகுப்பதால் 'ப்ரமாண சாஸ்த்ரம்' என்று பேர் பெறுகிறது –

'பத-வாக்ய-ப்ரமாண...'

'பாராவார-பாரீண': 'பாராவாரம்' என்றால் ஸமுத்ரம். 'பாரீண' என்றால் கரை கடந்தவர்.

சேர்த்துப் பார்த்தால் 'பத வாக்ய ப்ரமாண பாராவார பாரீண' என்பதற்கு, 'வ்யாகரணம், மீமாம்ஸை, தர்க்கம் என்ற கடல்களின் கரை கடந்த புத்திமான்' என்று அர்த்தம்.

சதுச்-சாஸ்த்ரங்கள் என்று தர்க்கம், வ்யாகரணம், மீமாம்ஸை, வேதாந்தம் ஆகிய நான்கைச் சொல்வார்கள். அதில் முதல் மூன்றைத் தான் கொஞ்சம் வரிசை மாற்றி 'பத-வாக்ய-ப்ரமாணம்' என்று, ஒரு வித்வத் ச்ரேஷ்டருக்கு அவச்யம் பாண்டித்யம் இருக்க வேண்டிய மூன்று சாஸ்த்ரங்களாகச் சொல்லியிருக்கிறது.

'பதேந வாசாம் (மலம் அபாகரோத்)': 'பதத்தினால் பதஞ்ஜலி வாக்கின் மலத்தை அகற்றினார்' என்கிற இடத்தில் பதம் என்பது அவர் எழுதிய வ்யாகரண புஸ்தகத்தைக் குறிக்கிறது என்பதற்காகச் சொன்னேன்.

ஸம்ஸ்க்ருத பாஷா விசேஷங்களை ரொம்பவும் நுணுக்கமாகப் புரிய வைத்து அவர் இலக்கண நூல் செய்திருப்பதற்கு விசேஷமான சிறப்பு உண்டு. ஸம்ஸ்க்ருதம் தேவபாஷை என்றால் தேவர்கள் தங்களுக்குள் பேசிக்கொள்கிற பாஷை என்று அர்த்தம். இங்க்லாண்டில் இருக்கும் இங்கிலிஷ்காரர்கள் பேசுவதை இங்கிலீஷ் என்கிறோம். ப்ரான்ஸில், ஜெர்மனியில், ஜப்பானில், இங்கே பெங்காலில், மஹாராஷ்ட்ராவில், மலையாளத்தில் உள்ள ப்ரெஞ்சுக்காரர்கள், மராட்டியர்கள். மலையாளத்தார்கள் பேசுகிற பாஷைகளை அந்தந்த தேசம், அந்தந்த ஜனக் கூட்டம் ஆகியவற்றின் பெயரை வைத்தே ப்ரெஞ்ச், ஜெர்மன், ஜப்பானீஸ், பெங்காலி, மராட்டி, மலையாளம் என்றெல்லாம் சொல்கிறோம். ஹிந்தியில் வ்ரஜ பாஷா, மைதிலீ என்றெல்லாம் பிரிவுகள் இருக்கின்றனவென்றால் அவையும் வ்ரஜம், மிதிலா என்ற இடங்களை வைத்து ஏற்பட்ட பேர்கள்தான். அம்மாதிரித் தேவபாஷை என்றால் தேவலோகத்தில் தேவர்கள் பேசுவது என்று அர்த்தம். இங்கிலிஷ்காரன் நம்மை ஆண்டால் அவனோடு பேசுவதற்காக நாம் இங்கிலீஷ் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறதல்லவா? அப்படியே லோகம் முழுவதையும் ஸூக்ஷ்மமாக இன்ன துறைக்கு இன்னார் என்று ஆள்வது தேவர்களே யாகையால் அவர்களுடைய பாஷையையும் நாம் ஸரியாக, முறையாகத் தெரிந்துகொள்ளத்தானே வேண்டும்? கர்மானுஷ்டானங்களில் வரும் மந்த்ரங்களையும், ச்லோகம் முதலானவற்றையும் நாம் ஸரியாகத் தெரிந்து கொண்டு சொல்வது தேவர்களோடேயே நாம் பேசுவது தான்! இதற்கு வ்யாகரண ஞானம் அத்யாவச்யம் அல்லவா?

ஞானம் மொழி கடந்தது. பக்தியை, அதாவது அன்பை, எந்த மொழியிலும் வெளிப்படுத்தலாம். ஆனால் நாம் சாஸ்த்ர கர்மாவும் நிறையச் செய்தேயாக வேண்டிய நிலையில்தானே இருக்கிறோம்?

அதனால் சாஸ்திரங்கள் அமைந்துள்ள ஸம்ஸ்கிருதத்தை ஸரிவரத் தெரிந்து கொள்ளத்தானே வேண்டும்?

தவிரவும், பழுதேயில்லாத அக்ஷரங்களைக் கொண்ட ஸம்ஸ்கிருதத்தை வ்யாகரண விதியறிந்து உச்சரிப்பதே ஒரு மந்த்ரயோகமாகி நமக்கு நாடி சுத்தியையும், அதன் வழியாகச் சித்த சுத்தியையும் தரும்.

இவற்றோடு, நவீன ஸயன்ஸுக்கு ஆங்கில ஞானம் அவச்யம் என்பது போலவே, ஆத்ம சாஸ்த்ரங்களை அறியவும் பாரத கலாசாரத்தின் ஸகல அம்சங்களையுமே அறியவும் ஸம்ஸ்க்ருத ஞானம் அவச்யமாகிறது. இதனாலெல்லாந்தான் 'மஹாபாஷ்ய'த்திற்கு உயர்வு.

மனோ, வாக்குகள் ஆச்சு காயம் பாக்கி இருக்கிறது. சரீரத்திற்கு ஏற்படும் மலத்தை அகற்ற அவர் என்ன செய்திருக்கிறார்?

மலம் சரீரஸ்ய ச வைத்யகேந

சரீரத்துக்கு அழுக்கு வியாதிகள்தான். வ்யாதியில்லாமல் ஆரோக்யமாக இருந்து கொண்டிருப்பதுதான் த்ரிகரண சுத்தியில் சரீர சுத்தியாகும். இதற்காகப் பதஞ்ஜலி அனுக்ரஹித்ததுதான் வைத்ய சாஸ்த்ரம். 'மலம் சரீரஸ்ய ச வைத்யகேந'.

ஆயுர்வேதத்தின் ஆதார சாஸ்த்ர புஸ்தகம் அவர் எழுதியதுதான். 'சரகம்' என்று அதற்குப் பேர். அவருக்குச் சரகர் என்று பெயர் உண்டாதலால் அவர் எழுதியது 'சரகம்'. ஆத்ரேயர் என்று அவருக்கு இன்னொரு பேர் இருப்பதை வைத்து, அதை 'ஆத்ரேய ஸம்ஹிதை' என்றும் சொல்வதுண்டு.

சரீர ஸம்பந்தமான அவருடைய வைத்ய நூலுக்குப் 'பதஞ்சலி' என்ற பெயரை வைத்து 'டைட்டில்' இல்லை. மனஸு ஸம்பந்தமாகவும், வாக்கு ஸம்பந்தமாகவும் அவர் எழுதிய மற்ற இரண்டு நூல்களில் 'பதஞ்ஜலி' என்ற பெயரில் மட்டும்தான் அவரைக் குறிப்பிட்டிருக்கிறது.

த்ரிகரண சுத்திக்கும் உசந்த சாஸ்த்ரங்களைக் கொடுத்துள்ள அவர் காய சுத்திக்குக் கொடுத்திருக்கும் வைத்ய சாஸ்த்ரத்திலேயே த்ரி-தாது சுத்தி என்பதாகப் பித்தம், வாதம், கபம் என்ற மலங்கள் நீங்க வழி சொல்லியிருக்கிறார்!

தப்பாக நினைக்காமல் சித்தத்தைத் திருத்தி, அப்புறம் நிறுத்தியே விடுவதற்கு யோக ஸூத்ரம்; தப்பாகப் பேசாமல் திருத்துவதற்கு மஹாபாஷ்யம்; தப்பாகக் கார்யம் செய்யாமல் திருத்துவதற்கு சரகம் என்றிப்படி மூன்று உத்தம நூல்களைக் கொடுத்திருக்கிறார். (உடம்பு ஸரியில்லாவிட்டால் கண் தெரியாமல், காது கேட்காமல், நடக்க முடியாமல், கார்யம் செய்ய முடியாமலாகிச் செய்வதெல்லாம் தாறுமாறாகத்தானே போகிறது? இதைத் திருத்தி நல்லபடி ஆக்கத்தான் வைத்ய சாஸ்த்ரம்.)

இந்த மூன்று நூல்களில் மஹாபாஷ்யத்துக்கு முதல் நூலான **பாணினி ஸூத்ரங்களுக்கு 'அஷ்டாத்யாயீ'** என்று பெயர் – எட்டு அத்யாயமிருப்பதால். பதஞ்ஜலியே முதநூலாகச் செய்த யோக

ஸூத்ரங்கள் 'அஷ்டாங்க யோகம்' என்பதைக் குறித்தது - அந்த ஸாதனையில் எட்டு அங்கங்கள் இருப்பதால். வைத்ய சாஸ்த்ரமாகவும் 'அஷ்டாங்க ஹ்ருதயம்' என்று ஒன்று உண்டு. ஆனால் அது இவருடைய சரக ஸம்ஹிதையல்ல. (வாக்படர் என்பவர் எழுதிய தனி நூல்.)

த்ரிகரணத்தாலும் தப்பு செய்யாமல் திருத்தித் தந்த பரமோபகாரி பதஞ்ஜலி மஹர்ஷி. அவை ஒவ்வொன்றின் அசுத்தியையும் நிவ்ருத்தி செய்தவர். 'அபாகரோத்' என்பதற்கு 'நிவ்ருத்தி செய்தார்' என்று அர்த்தம்.

அப்படிப்பட்டவரை முநீநாம் ப்ரவரம் என்று சொல்லியிருக்கிறது. முனிச்ரேஷ்டரை 'முனிவரர்' என்று சொல்லக் கேட்டிருப்பீர்கள். அந்த முனிவர்களிலும் முன்னால் நிற்பவராதலால் இவர் முனி ப்ரவரர்! ஆசார்ய பரம்பரையின் ப்ரவரம் சொல்வதாக ஆரம்பித்தேன்; அதிலே ப்ரவரராக இவர் வந்து நிற்கிறார்!

'இப்படியாகப்பட்ட பதஞ்ஜலிக்கு விசேஷமாக அஞ்ஜலி தெரிவித்து வணங்கி நிற்கிறேன்' என்று ச்லோகம் முடிகிறது:

*பதஞ்ஜலிம் ப்ராஞ்ஜலிர்-ஆநதோஸ்மி*

இந்த மூன்று நூல்களைப் பற்றி இன்னும் ஒரு விசேஷம் சொல்கிறேன்: எந்த சாஸ்த்ரமானாலும் அதற்கு மூன்று விதமான நூல்கள் உண்டு – ஸூத்ரம், பாஷ்யம், வார்த்திகம் என்று மூன்று. ஸூத்ரம்தான் basic text ஆதாரமான அடிப்படை நூல். சாஸ்த்ரக் கோட்பாடுகளை மிகச் சுருக்கமாக அதில் கொடுத்திருக்கும். அதைப் புரியும்படியாக விளக்கி எழுதுவதே பாஷ்யம். பாஷ்யத்திலும் கடினமாக உள்ள இடங்களை இளக்கிக் கொடுத்து, கொஞ்சம் சொல்லிவிட்டதையும், சொல்லாமலே விட்டதையும் விளக்கி விஸ்தாரம் செய்வதே வார்த்திகம். சில சாஸ்த்ரங்களில் இந்த மூன்றில் ஸூத்ரத்திற்கு அதிக ப்ரக்யாதி இருக்கும்; அதையே 'அதாரிடி'யாக வைத்துக் கொள்வார்கள். சிலதில் பாஷ்யத்திற்கு, சிலதில் வார்த்திகத்திற்கு என்று க்யாதியும் 'அதாரிடி'யும் இருக்கும். மூன்றுக்குமே ஸம ப்ரக்யாதி, மூன்றில் இரண்டிற்கு ஸம ப்ரக்யாதி என்றெல்லாமும் இருப்பதுண்டு.

பதஞ்சலி செய்த மூன்று நூல்களில் யோகத்துக்குச் செய்தது 'ஸூத்ரம்'; வ்யாகரணத்துக்குச் செய்தது 'பாஷ்யம்'; வைத்யத்துக்குச் செய்தது 'வார்த்திகம்'●. இவற்றின் தனிச்சிறப்பு என்னவென்றால், ஸூத்ரமோ, பாஷ்யமோ, வார்த்திகமோ எதுவானாலும் அந்தந்த சாஸ்த்ரத்திலும் அதுதான் அதாரிடி, அதற்குத்தான் ஜாஸ்தி ப்ரக்யாதி என்றிருப்பதேயாகும்! யோக சாஸ்த்ரத்தில் பாதஞ்ஜல ஸூத்ரம்தான் முதலிடம் பெறுகிறது. அந்த ஸூத்ரத்திற்கு வ்யாஸர் எழுதியுள்ள பாஷ்யத்திற்கோ, வ்யாஸ பாஷ்யத்திற்கு வாசஸ்பதி மிச்ரர், விஞ்ஞான பிக்ஷு ஆகியவர்கள் எழுதியுள்ள வார்த்திகத்திற்கோ அவ்வளவு ப்ராபல்யமில்லை. வ்யாகரணத்தை எடுத்துக் கொண்டால் பாணினியின் ஸூத்ரம் எத்தனை 'லாஜிக'லாகவும், ஒன்றும் விட்டுப் போகாமலும் தேவபாஷா மர்மங்களுக்கு ரூல்கள் பண்ணி விளக்கியிருக்கிறது

---

● 'வ்யாகரண மஹாபாஷ்யம்...
ஸூத்ராணி யோக சாஸ்த்ரே வைத்யகசாஸ்த்ரே ச வார்த்திகாரி தத: க்ருத்வா பதஞ்ஜலி முநி:... (பதஞ்ஜலி சரிதம் V. 24-25)

என்று எல்லாரும் அதிசயப்பட்டாலும் அதைப் புரிந்துகொள்ள மண்டையை உடைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. அதை ம்ருதுவாக்கி இளக்கி, விளக்கிக் கொடுக்கும் பதஞ்ஜலியின் பாஷ்யத் திற்கே அதிக ப்ரக்யாதி இருக்கிறது. அதுவே 'அதாரிடி' என்று காட்டு கிறது போல, வேறே எந்த சாஸ்த்ரத்திலும் உள்ள பாஷ்ய நூல்களுக்கு இல்லாத அடைமொழியாக இது ஒன்றுக்கே 'மஹா' போட்டு 'மஹா பாஷ்யம்' என்று சொல்லப்படுகிறது! வைத்ய சாஸ்த்ரத்தை எடுத்துக் கொண்டாலும் அதில் அதிக க்யாதி, அதிக ப்ரசாரம், அதாரிடி பெற்றி ருப்பது வார்த்திக க்ரந்தமான 'சரகம்'தான்! ஆதிவைத்ய நூல்களில் இன்னொன்றாக இருப்பது ஸுச்ருதர் என்பவர் செய்தது. ரணசிகித்ஸை யைக் குறிப்பாக விளக்கும் அந்த நூலில் சொல்லியுள்ள ஸர்ஜரி முறைகள், ஸர்ஜிகல் கருவிகள் ஆகியவற்றைப் பற்றி 'அறிஞருலகம்' எனப்பட்ட சிலபேர் கொண்டாடிப் பேசினாலும், நடைமுறையில் பார்த்தால் ரணசிகித்ஸையில் இந்த முறை எடுபட்டுப் போய் இங்கிலீஷ் முறைதான் பின்பற்றப்பட்டு வருகிறது. சரகத்தில் உள்ளபடி உள்ளுக்கு மருந்து சாப்பிடுவதுதான் ஆயுர்வேதம் என்று பெயர் பெற்று நடைமுறையில் இருக்கிறது.

நடனம் என்றால் அதற்குப் பரத ச்ாஸ்த்ரம், அரசியல் என்றால் அர்த்த சாஸ்த்ரம் என்பது போல வைத்யம் என்றால் சரகம், வ்யாகர ணம் என்றால் என்றால் மஹா பாஷ்யம், யோகம் என்றால் பாதஞ்ஜல ஸூத்ரம் என்று அவருடைய புஸ்தகங்களே ப்ரதான க்ரந்தங்களாகப் புகழ்பெற்றிருக்கின்றன. ஒரு விதத்தில் மூன்றுமே வைத்ய புஸ்தகங்கள் தான்! வாக்கு மலம் போக வைத்யம் பண்ணுவது மஹாபாஷ்யம். மனோ மலம் போக வைத்யம் பண்ணுவது யோக ஸூத்ரம்.

ஆத்மாவுக்கான சாஸ்திரம் என்று பார்த்தால் யோக ஸூத்ரத்துக்கு முக்யத்வம் இருந்தாலும் அறிவுக்கான, அறிவாளிகளுக்கான வித்யை என்று எடுத்தால் இவற்றில் ஸம்ஸ்க்ருத பாஷையை முறையாகக் கற்பிக் கும் மஹாபாஷ்யத்துக்குத்தான் முக்யத்வம். அதுதான் ரொம்பப் பெரிய புஸ்தகமும். ஆத்ம சாஸ்திரங்களைப் படித்துப் புரிந்து கொள்ள வும் இலக்கணம் அவச்யம்தானே?

யோகத்துக்கு எதிர் ஸித்தாந்தங்களுண்டு. அத்வைதமே கொஞ்சம் அப்படித்தான் என்றேன். மஹாபாஷ்யமோ ஸகலருக்கும் ஸம்மதமா னது.

ஆகையினால் சிதம்பரத்தில் ஏராளமான சிஷ்யர்களைச் சேர்த்துக் கொண்டு அவர்களுக்கு மஹாபாஷ்யப் பாடம் சொல்லித் தருவது என்றே பதஞ்ஜலி ஆரம்பித்தார். நடராஜாவின் உடுக்குச் சப்தத்தி லிருந்தே பாணினி சப்தங்களை க்ரஹித்து வ்யாகரண ஸூத்ரங்களைத் செய்தார். அதற்கு வ்யாக்யானம்தானே மஹாபாஷ்யம்? அதனால் அது சிதம்பரம் கோயிலிலேயே போதிக்கப்படுவது ரொம்பவும் பொருத்த மாகி விட்டது.

பாணினியின் ஸூத்ரத்தையும், பதஞ்ஜலியின் பாஷ்யத்தையும் நடராஜ மூர்த்தியின் கையோடும், காலோடும் ஸம்பந்தப்படுத்தி

வேடிக்கையாக ஒரு ச்லோகம் இருக்கிறது★.

கைக்குப் பேர் பாணி. நடராஜாவின் பாணியிலுள்ள உடுக்குச் சப்தத்திலிருந்துதானே பாணினியின் ஸூத்ரம் பிறந்தது? அதை அந்த ச்லோகத்தில் நடராஜாவின் கையிலிருந்து எழும்பும் சப்தம் வ்யாகரணத்திற்கு ஆதார நூலைத் தந்ததாகச் சொல்லியிருக்கிறது.

கால் ஸமாசாரம் என்ன? நடராஜாவின் பாதத்துக்கும் பதஞ்ஜலியின் பாஷ்யத்துக்கும் என்ன ஸம்பந்தம்?

நடராஜாவின் காலடியில் நின்று தர்சனம் செய்வதோடு பதஞ்ஜலிக்கு த்ருப்தி உண்டாகிவிடவில்லை. அதனால், நர்த்தனம் செய்கிற அந்தப் பாதத்திலேயே பாம்பு ரூபத்தில் பாதஸரமாகச் சுற்றிக் கொண்டு ஸந்தோஷப்படுவார். பாதஸரப் பதஞ்ஜலியின் வாயில் எப்பொழுதும் மஹாபாஷ்யம் இருக்கும்.

இதையே ச்லோகத்தில், நடராஜாவின் கையிலிருந்து எழும்பும் சப்தத்தில் வ்யாகரண ஸூத்ரம் இருப்பதுபோல காலிலிருந்து (காற்சிலம்பிலிருந்து) எழும் சப்தத்தில் அந்த ஸூத்ரத்தின் பெரிய பாஷ்யம் இருக்கிறது என்று சொல்லியிருக்கிறது!

பிற்காலத்திலும்கூட சிவன் கோயில்களிலேயே வ்யாகரணம் போதிப்பதற்கென்று 'வ்யாகரணதான மண்டபம்' என்று ஓர் இடம் ஏற்பட்டது.



## ஆயிரம் சீடருக்கு அதிசயப் பாடம்!

சிதம்பரம் ஆயிரங்கால் மண்டபத்தில் பதஞ்ஜலி பாடம் நடத்தினார். அவரோ ஆயிரம் நா படைத்த ஆதிசேஷன்! ரொம்பவும் விஸ்தாரமான விஷயமென்றால், 'ஆயிரம் நா படைத்த ஆதிசேஷன் தான் சொல்லணும்' என்றே வசனமிருக்கிறது. மஹாபாஷ்யம் அவ்வளவு விஸ்தாரமானது. ஸாதாரணமாகப் பதஞ்ஜலி மனுஷ்ய ரூபத்தில் ஒரு ரிஷியாகத் தெரிந்து கொண்டிருந்தவர்தான். ஒரு முகம், ஒரு நாக்கு என்று இருந்தவர்தான். இப்போது என்ன ஆயிற்றென்றால் அவர் நிஜமாகவே ஆயிரம் நா படைத்த ஆதிசேஷ ரூபத்தையே எடுத்துக் கொள்ளும்படியாயிற்று.

ஏனென்றால், அவரிடம் பாடம் கேட்க ஆயிரம் சிஷ்யர்கள் சேர்ந்து விட்டார்கள்.

---

★ யஜ்ஞ நாராயண தீக்ஷிதரின் ஸாஹித்ய ரத்னாகரம் – XI. 124
'அருள் உரை' 28-வது புத்தகத்தில் இடம்பெற்றுள்ள 'வியாகரணமும் சிவபெருமானும்' என்ற உரையைப் பார்க்கவும்.

வித்யையை, அதிலும் பாஷா சாஸ்த்ரத்தை, அறிவதில் இந்தத் தேசத்தில் ஆதிகாலத்திலிருந்து இருந்துவந்துள்ள அக்கறை அதிசயமானது. தேசத்தின் ஒரு மூலைக்கு மறு மூலை போய்க்கூட வித்யாப்யாஸம் செய்தார்கள். அப்படி இப்போதும் இந்தப் பெரிய உபகண்டத்தின் நாலா திசையிலிருந்தும் சிதம்பரத்துக்கு வித்யார்த்திகள் வந்துவிட்டார்கள்.

அவர்களில் ஒவ்வொருவருக்கும் 'இன்டிவிஜுவல் அட்டென்ஷன்' கொடுத்து (தனிப்பட்ட கவனம் செலுத்தி) பாடம் சொல்ல வேண்டும், முடிந்த மட்டும் சீக்ரமாக இதைச் செய்து முடிக்க வேண்டும் என்று பதஞ்ஜலி நினைத்தார். எந்தச் சிஷ்யன் எந்தக் கேள்விக் கேட்டாலும் தாமஸமில்லாமல் உடனே பதில் சொல்ல வேண்டுமென்று நினைத்தார். இப்படி ஒவ்வொருவருக்கும் பாடம் சொல்லி, ஒவ்வொருவரிடமும் தனியாக ஸந்தேஹங்கள் கேட்டு நிவர்த்தி செய்வதென்றால் ஒரு முகத்தோடு, ஒரு வாயோடு இருந்தால் போதாது என்று எண்ணினார். அதனாலேயே ஆயிரம் சிரஸுள்ள ஆதிசேஷ ஸ்வரூபத்தையே பாடம் சொல்லும் காலத்தில் எடுத்துக் கொள்வது என்று தீர்மானித்தார்.

ஆனால் ஆதிசேஷ ஸான்னித்யத்தை மனுஷ்யர்களால் தாங்கமுடியாது. அதனுடைய த்ருஷ்டி பட்டால் போதும், அல்லது மூச்சுக்காற்றுப் பட்டால் போதும், எந்த மனுஷ்யரானாலும் பஸ்மமாய்ப் போய்விட வேண்டியதுதான். ஆதிசேஷன் பார்ப்பது மட்டுமில்லை, ஆதிசேஷனைப் பார்த்தாலுங்கூட, பார்க்கிற மனுஷ்யர் பஸ்மமாகிவிட வேண்டியதுதான்! அவ்வளவு உக்ரம்!

அதனால் என்ன உத்தேசித்தாரென்றால் ... தம்மைச் சுற்றி ஒரு திரையைப் போட்டுக் கொண்டு அதற்குள் ஆதிசேஷ ரூபத்தில் இருப்பதென்றும், சிஷ்யர்களைத் திரைக்கு வெளியில் தம்மைச் சுற்றி, ஒவ்வொரு முகத்துக்கும் நேரே ஒரு சிஷ்யன் இருக்கும் விதத்தில் உட்காரவைத்துக் கொள்வதென்றும் தீர்மானித்துக் கொண்டார்.

இப்படி குரு கண்ணில் படாமல் மறைவாக இருப்பதால் சிஷ்யர்களில் யாராவது இஷ்டப்படி வெளியிலே சுற்றப் போய்விட்டால் என்ன பண்ணுவது? அப்படி ஆகாமல் பயமுறுத்தி மிரட்டித் தடுக்க வேண்டுமென்று நினைத்து, 'உத்தரவில்லாமல் யாராவது வெளியே போனால் அவர்கள் ப்ரம்ம ரக்ஷஸாகிவிடுவார்கள்' என்று சாபமாக ஆஜ்ஞை செய்தார்.

ப்ரம்ம ராக்ஷஸம் என்கிறோமே, அதுதான் ப்ரம்மரக்ஷஸ்.

அது பிசாசைப் போன்ற ஒருவிதப் பிறவி. தேவதைகளில் அனேக விதம் இருப்பதுபோலப் பிசாசுகளிலும் உண்டு. மனுஷ்யர்கள், பக்ஷிகள், ம்ருகங்கள் எல்லாவற்றிலும்தானே விதம்விதமாகப் பார்க்கிறோம்?

வேடிக்கை என்னவென்றால் ராக்ஷஸ ஜாதியிலேயே பலவிதம் இருந்தாலும் அந்த ராக்ஷஸ ஜாதி என்பதே பலவிதமான தேவ ஜாதிகளில் ஒன்றுதான்! தேவர்கள் என்று பொதுவாக நாம் சொல்பவர்களோடு

ராக்ஷஸர்கள் சண்டை போட்டதாகவே புராணங்களில் பார்ப்பதால் அவர்கள் வேறே ஜாதி, இவர்கள் வேறே ஜாதி என்று தோன்றினாலும், வாஸ்தவத்தில் ராக்ஷஸர்களும் தேவ ஜாதிகள் பலவற்றுக்குள்ளேயே தாழ்ந்து தாழ்ந்துபோய் க்ரூரமாக இருக்கும் ஒரு பிரிவுதான்! அஸுரர்கள் என்பவர்கள்தான் தேவ ஜாதிக்கு முற்றிலும் வேறானவர்கள். ஸுரர் என்ற தேவருக்கு நேரெதிர் அஸுரர்தான். பேச்சு வழக்கிலுங்கூட 'தேவாஸுர' என்கிறோமே தவிர 'தேவ ராக்ஷஸ' என்று சொல்வதில்லையல்லவா? 'அமர'த்தில் ஆதித்யர்களில் ஆரம்பித்து தேவ ஜாதிகளைச் சொல்லிக் கொண்டு போகும்போது 'வித்யாதர-அப்ஸரஸோ-யக்ஷ-ரக்ஷோ-கந்தர்வ-கிந்நரா' என்று ராக்ஷஸர்களையும் உள்ளடக்கிச் சொல்லியிருக்கிறது. இவர்களெல்லாம் தேவ ஜாதிகள் 'தேவ யோநய:' என்று முடித்துவிட்டு அப்புறம் அஸுர ஜாதிகளை 'அஸுரா-தைத்ய-தைதேய-தநுஜ' என்று அடுக்கியிருக்கிறது.

இந்த ராக்ஷஸ ஜாதிக்குள் அப்புறம் பல பிரிவுகள், உபஜாதிகள் – மனுஷ்ய ஜாதியிலேயே நாலு ஜாதி, அப்புறம் அதில் ஒவ்வொரு ஜாதியிலும் ஸப்-ஸெக்டுகள் என்று இருக்கிறது போல. அப்படி ராக்ஷஸ ஜாதியைச் சேர்ந்த ஒன்றுதான் ப்ரம்ம ரக்ஷஸ். பிசாசு மாதிரியான ஆவி வகைகளைச் சேர்ந்தது அது. (ஆச்சர்யமாயிருக்கலாம்: பிசாசுகூட தேவ ஜாதியில் வருவதுதான்! 'பிசாசோ குஹ்யக: ஸித்தோ பூதோ (அ)மீ தேவயோநய:' என்று 'அமர'த்தில் முடித்திருக்கிறது.) வேதாத்யயனம் நன்றாகப் பண்ணியும், துன்மார்க்கத்தில் போய் மற்ற பிராமணர்களுடைய ஸொத்து, ஸ்த்ரீ முதலானவற்றை அபஹரித்து அல்பாயுஸில் செத்துப் போனவர்கள் அந்த வேத ஞாபகத்தோடேயே பிசாசு மாதிரி இருப்பதுதான் பிரம்மரக்ஷஸ். அதற்கு ஆஹாரம் தினந்தோறும் வேதம் தெரிந்த ஒரு பிராமணனைச் சாப்பிடுவதுதான்! மாறு வேஷத்தில் போய், அத்யயனம் செய்தவர்களிடம் நயமாகப் பேசி நீள இழுக்கடித்துக் கொண்டு தனியிடத்துக்குப் போய் வேத சாஸ்த்ர ஸம்பந்தமாகவே அனேகம் கேள்விகள் கேட்கும். அவர்கள் பதில் தெரியாமல் முழிக்கும் போது அடித்துப் பக்ஷித்துவிடும். 'ப்ரம்ம ராக்ஷஸம் அடிச்சுப் போட்டுடுத்து' என்று க்ராமாந்தரங்களில் சொல்வதுண்டு.

தாம் திரைபோட்டுக்கொண்டு க்ளாஸ் எடுக்கும்போது உத்தரவில்லாமல் வெளியே போகிறவர்கள் அப்படி (ப்ரம்ம ரக்ஷஸாக) ஆகிவிடுவார்கள் என்று ஆஜ்ஞை பண்ணிவிட்டுப் பதஞ்ஜலி அனேகக் காலம் பாடம் நடத்திக் கொண்டிருந்தார்.

திரையை யாரும் எக்காரணத்தைக் கொண்டும் தூக்கிப் பார்க்கக் கூடாதென்றும் உத்தரவு போட்டிருந்தார். அக்னி ஜ்வாலையைத் தாங்க முடியாது என்பதால்!

இப்படி ரொம்ப நாள் பாடம் நடந்தது. அப்புறம், கதை வளர வேண்டாமா? அதனால் ஒரு சிஷ்யனுக்கு, 'எப்படி இவர் ஒரு ஆஸாமியாக இருந்துகொண்டே ஆயிரம் பேருக்கும் சொல்லிக்கொடுக்கிறார்? திரை போட்டுக் கொண்டு என்னவோ ஸித்து, கித்து பண்ணிச் செய்கிறாற்போல இருக்கிறது. அது என்ன என்றுதான் பார்த்து விடுவோமே!'

என்று கட்டுப்படுத்த முடியாத ஆர்வம் உண்டாயிற்று.

எச்சரிக்கையை மீறித் திரையைத் தூக்கிப் பார்த்தான்.

ஆதிசேஷ ஸ்வரூபத்துடன் ஆயிரம் சிரஸோடு இருந்தவரின் ஜ்வாலாமயமான திருஷ்டியும் விஷ ச்வாஸமும் பட்டு, அத்தனை சிஷ்யர்களும் பஸ்மமாகிவிட்டார்கள்!

குரு வசனத்தைக் கேட்காமல் மீறினால் மஹத்தான அனர்த்தம்தான் உண்டாகும் என்பதற்கு நிரூபணமாக இப்படி ஆயிற்று: 'குருவசந – வ்யதிலங்கநம் ஹ்யநர்த்த:' என்று 'பதஞ்ஜலி சரித'த்தில் இந்த இடத்தில் சொல்லியிருக்கிறது.

இப்படி வ்யாகரண பாடம் ஒரே விபரீதத்தில் முடிந்தது.

முழு விபரீதமாகப் போகாமல் அதில் ஒரு சின்ன விலக்கு ஏற்பட்டது. என்னவென்றால் ஆயிரம் சிஷ்யர்களும் பஸ்மமாகாமல் ஒருத்தர் மாத்ரம் தப்பினார். பாக்கி 999 பேர்தான் எரிந்து போனது. 'ஆயிரத்தில் ஒண்ணு' என்று சொல்லும் வழக்கம் அதிலிருந்துதான் வந்ததோ என்னவோ?

அந்த ஒருத்தர் எப்படித் தப்பினாரென்றால், அவர் கொஞ்சம் மந்த புத்திக்காரர். பாடம் அவருக்கு அவ்வளவாகப் புரிவதில்லை. இத்தனை நாள் எப்படியோ கட்டுப்பாடாக உட்கார்ந்து கொண்டிருந்துவிட்டார். புத்தி ஸூக்ஷ்மம் இல்லாதவர்தானென்றாலும் அவர் ஆயிரம் மைலுக்கு அந்தண்டை இருக்கும் வங்காளத்திலிருந்தாக்கும் படிக்க வந்தவர். கௌட தேசம் என்று அதைச் சொல்வார்கள்.



## கௌடர்; திராவிடர்

இந்தியாவில் விந்த்ய மலைக்கு வடக்கேயுள்ள பாதிபாகம் முழுவதையுமே கௌடதேசம் என்றும், தெற்கேயுள்ள பாதி முழுவதையும் த்ராவிட தேசம் என்றும்தான் பிரிவினை செய்திருக்கிறது. அப்புறம் அந்தக் கௌட தேசத்தில் பஞ்ச கௌடம் என்பதாக ஐந்து பிரிவு த்ராவிட தேசத்தில் பஞ்ச த்ராவிடர் என்பதாக ஐந்து பிரிவு என்று செய்திருக்கிறது. பஞ்ச கௌடர்கள் யார் யாரென்றால், வடகோடியில் ஸாரஸ்வதர்கள் என்னும் காச்மீரிகள், அப்புறம் பஞ்சாப், உ.பி-யிலுள்ள கான்ய குப்ஜர்கள், நேபாளத்திலும் பீஹாரிலுமுள்ள மைதிலர்கள், உத்கலர்கள் என்ற ஒரிஸாக்காரர்கள் – இந்த நாலும் போகக் 'கௌடர்' என்ற மூலப் பெயருடனேயே வங்காளத்திலுள்ள வங்காளிகள் ஆகியோர். பஞ்ச த்ராவிடர் யார் யாரென்றால் வடக்கே குஜராத்திலுள்ள கூர்ஜரரில் ஆரம்பித்து, மஹாராஷ்டிரர், ஆந்திரர், கர்நாடகர் ஆகிய நாலுபேரும் கடைசியாக, த்ராவிடர் என்ற மூலப் பெயருடனேயே உள்ள தமிழ் மக்களும் ஆவார்கள். (மலையாள பாஷை ஸுமார்

ஆயிரம் வருஷத்துக்கு முன்தான் தமிழையும் ஸம்ஸ்க்ருதத்தையும் கலந்து ஏற்பட்டதால் மலையாளிகள் இதில் தனியாகச் சொல்லப்பட வில்லை.) இதிலே ஒரு ஒற்றுமை, 'கௌடர்' என்றே ப்ரதானமாக நின்றுவிட்ட வங்காளிகளும், 'த்ராவிடர்' என்றே ப்ரதானமாக நின்று விட்ட தமிழர்களும்தான் மற்றவர்களுக்கு முந்தி இங்கிலீஷ் படிப்புப் படித்து வெள்ளைக்காரர்களிடம் குமாஸ்தாக்களாகப் போனவர்கள்!

தப்பித்த சிஷ்யர் கௌடர். இத்தனை நாளாகப் பல்லைக் கடித்துக் கொண்டு க்ளாஸில் இருந்துவந்த அவருக்கு இன்றைக்கு ஜலமோசனம் பண்ணனும்போல இருந்தது. அதை சாக்காக வைத்துக்கொண்டு எழுந்திருந்துபோய்விட்டார்.

அப்புறம், அவர் கொஞ்சம் சுற்றிவிட்டுத் திரும்பிய போது பார்த்தால் 999 ஸஹ மாணவர்களும் இருந்த இடம் தெரியவில்லை. குருவானால், 'இத்தனை காலம் ச்ரமப்பட்டுப் பாடம் நடத்தியதெல் லாம் நிஷ்ப்ரயோஜனமாச்சே! சீக்ரம் முடித்து விட்டு நடராஜாவிடமே இருந்து கொண்டிருக்கணும் என்று நினைத்துப் பண்ணினது ஒரே விபரீதமாக ஆச்சே! பாவம், எங்கேயெங்கேயிருந்தோ வந்த குழந்தைக ளின் கதி இப்படி ஆனதே!' என்று துக்காக்ராந்தராக உட்கார்ந்திருந் தார்.

'சொல்லாமல் வெளியே போனோமே!' என்று பயந்து நடுங்கிக் கொண்டு கௌட தேச சிஷ்யர் பதஞ்ஜலியிடம் போனார்.

பதஞ்ஜலிக்கானால் 'அப்பா! ஒருத்தனாவது தப்பினானா?' என்று இவரைப் பார்த்ததும் கொஞ்சம் ஆறுதலே ஆயிற்று. துக்கம் போய்க் கொஞ்சம் சந்தோஷம் ஏற்பட்டது. அதனால் இன்முகத்துடனேயே கௌடரை வரவேற்றார்.

ஆயிரம் சிஷ்யாளைக் கொண்டு வ்யாகரண சாஸ்த்ரத்தை ப்ரமாத மாக ப்ரசாரம் செய்ய வேண்டுமென்று போட்ட பெரிய ப்ளான் ஃபெயிலாகிவிட்டதல்லவா? அதனால் அப்படியெல்லாம் ஆகாசக் கோட்டை கட்ட வேண்டாம், மிஞ்சின இந்த ஒருத்தருக்குச் சொல்லிக் கொடுத்து, இவர் மூலமே ப்ரசாரமாகிறவரை ஆகிவிட்டுப் போகட்டும் என்று முடித்துவிடலாமென்று பதஞ்ஜலி நினைத்தார்.

'மிஞ்சினவன் நல்ல புத்திசாலியாயில்லாமல் மந்தனாக இருக்கி றானே! இவனுக்கு எத்தனை காலம் சொல்லிக் கொடுப்பது? ஏற்கெனவே இத்தனை காலம் வீணான பிறகு இன்னமும் எத்தனை நாள் எடுத்துக் கொள்வது?' என்று யோசித்தார் ஒரு வழி தோன்றிற்று. 'புத்தி சக்தியால் பண்ணி லேசில் பாடம் முடிக்க முடியாது. அனுக்ரஹ சக்தியால்தான் ஸுலபமாக ஸாதிக்க வேண்டும். ஒரு தகப்பனார்காரர் ஆயுஸ் முழுக்கச் சேர்த்த பொன்னை, பொருளை அப்படியே ஒரு மூட்டையாகக் கட்டி க்ஷணத்தில் பிள்ளையிடம் கொடுப்பது போல நம்முடைய வ்யாகரண ஞானம் முழுதும் க்ஷணத்தில் இந்தப் பையனின் புத்தியில் ப்ரகாசிக்கும்படியாக அனுக்ரஹித்துவிட வேண்டும்' என்று தீர்மானித்தார்.

தெய்வ புருஷர்கள் அனுக்ரஹ சக்தியால் எதுவும் செய்வார்கள். எந்த ஊரிலோ பாடுவதை மின்சார அலையாக்கி அந்த அலையை மறுபடி பாட்டாக்கி க்ஷண காலத்தில் இங்கே நாம் ரேடியோவில் கேட்கிறோமல்லவா? இதைவிட இன்னும் அதிசயமான transmission எல்லாம் மஹான்கள் பண்ணுவார்கள். தங்களுடைய ஞானத்தை, தபோபலத்தை எல்லாங்கூட அப்படியே சிஷ்யருக்கு transmit பண்ணி விட அவர்களால் முடியும். ஸமீப காலத்தில் ராமக்ருஷ்ண பரமஹம்ஸர் அப்படித்தான் விவேகானந்தருக்குப் பண்ணினார் என்கிறார்கள்.

மனுஷ்யர்களுக்குத் தங்களுடைய மனுஷ்ய சக்தியைக் கொண்டே தர்மமாக வாழ முடியும், திவ்யானுபவங்களும் ப்ரஹ்மஞானமுங்கூடப் பெற முடியும் என்று உத்ஸாஸப்படுத்துவது அவதாரங்களின் கடமைகளில் ஒன்றாகிறது. அதனால் திவ்ய சக்தியை முடிந்தமட்டும் குறைத்துக் கொண்டு மனுஷ்ய சக்தியாலேயேதான் அவர்களும் காரியங்களைச் செய்வார்கள். அவசியம் நேரும்போது மாத்ரமே திவ்ய சக்தியையும் காட்டிச் செய்வார்கள். அப்படித்தான், முடிந்த மட்டும் மனுஷ்யர் மாதிரியே செய்து கொண்டிருந்த பதஞ்ஜலி ஆயிரம் பேரில் ஒவ்வொருத்தருக்கும் கவனம் கொடுத்துப் பாடம் சொல்ல நினைத்த போது ஆதிசேஷரூபம் எடுத்துக் கொண்டார். 'இவர்களுக்கு பூர்ண வித்வத் ஸித்திக்கக் கடவது' என்று க்ஷண மாத்ரத்தில் பாடத்தை முடித்துவிடாமல் அப்போதும் மனுஷ்ய ரீதியில்தான் கேள்வி கேட்டு பதில் சொல்லி நடத்தினார். இப்போதுதான் அதற்கும் மேல் படிக்குப் போய் மேலும் திவ்ய சக்தியைக் காட்ட அவசியம் நேர்ந்ததால் அப்படிச் செய்யலாமென்று நினைத்தார்.

பதஞ்ஜலி கௌடரைப் பார்த்து, 'எனக்குத் தெரிந்ததெல்லாம் உனக்குத் தெரியட்டும்' என்று பூர்ணானுக்ரஹம் செய்தார்.

உடனேயே மந்த புத்திக்காரருக்கு வ்யாகரணத்தில் பரிபூர்ண ஞானமுண்டாகிவிட்டது! மஹாபாஷ்யம் மனப்பாடமாகிவிட்டது!

ஆனால், ஒரே சந்தோஷமாகப்பட்டுவிட முடியாமல் ஒரு கஷ்டமும் கூடவே ஏற்பட்டது.

உத்தரவில்லாமல் வெளியே போகிறவர் ப்ரம்ம ரக்ஷஸாகி விடுவார் என்று சாப ரூபத்தில் பதஞ்ஜலி ஆஜ்ஞை செய்திருந்தாரல்லவா? தெய்விக புருஷர்களின் சொல் பலிக்காமல் போகவே போகாது. அவர்களுமேகூட இப்படியொன்று சொன்ன பிறகு அதை வாபஸ் வாங்கிக் கொள்ள முடியாது. அதற்குப் பரிகாரமாக, அதை நிவ்ருத்தி செய்வதாக சாப விமோசனம் என்று ஒரு நிபந்தனை விதித்துத்தான் அந்தக் கண்டிஷனுக்கு உட்பட்டே தாங்கள் சொன்னதை மாற்ற முடியும்.

அந்த ரீதியில்தான் இப்போது நடந்தாக வேண்டுமென்று பதஞ்ஜலிக்குத் தெரிந்தது. கௌடர் ப்ரம்ம ரக்ஷஸாகத்தான் வேண்டும். ஆனால், அது தீர்வதற்கு விமோசனம் சொல்வோம் என்று நினைத்தார்.

என்ன விமோசனமென்றால், ப்ரம்ம ரக்ஷஸ் வேத அத்யயனம் செய்தவர்களைத்தானே கேள்வி கேட்டு, பதில் சொல்லா விட்டால் அடித்துத் தின்னும்? அப்படி இந்த கௌடர் ப்ரம்ம ரக்ஷஸான பிறகு கேள்வி கேட்கும்போது வ்யாகரண ஸம்பந்தமாக ஒன்று கேட்க வேண்டும். அதற்கு ஒருத்தர் பதில் சொல்லி விட்டால் அவரே மஹாபாஷ்ய உபதேசம் பூர்த்தியாகப் பெறுவதற்கு யோக்யதை வாய்ந்தவர். அவருக்கு அப்போது இவர் அனுக்ரஹ சக்தியால் கற்றுக்கொண்ட மஹாபாஷ்யம் முழுவதையும் மனுஷ்ய ரீதியில் கற்றுக் கொடுக்க வேண்டும். இப்படி மஹா பாஷ்யம் வருங்காலத்தில் ப்ரசாரமாகும்படியாகத் தகுந்த வார்ஸிடம் (வாரிசிடம்) இவர் அதை ஒப்படைத்தாரோ இல்லையோ, இவருக்கு ப்ரம்ம ராக்ஷஸ ரூபம் போய்ப் பழையபடி ஆகிவிடுவார்.

இப்படி பதஞ்ஜலி தீர்மானம் பண்ணி, இவர் கேட்க வேண்டிய கேள்வி என்னவென்றும் சொல்லிக் கொடுத்தார்.

இலக்கண சம்பந்தமான அதைக் கொஞ்சம் புரிய வைக்கப் பார்க்கிறேன்: ஸம்ஸ்க்ருதத்தில் 'ப்ரத்யயம்' என்று ஒன்று உண்டு. ஒரு சொல்லோடு அதன் முடிவில் 'விகுதி' என்று ஒன்றைச் சேர்க்கிறோமே, அந்த விகுதி என்னும் suffix குத்தான் 'ப்ரத்யயம்' என்று பேர். ('விகுதி' என்பதும் ஸம்ஸ்க்ருத 'விக்ருதி' என்பதிலிருந்து வந்ததுதான்.) இந்த ப்ரத்யயத்திலேயே பல தினுஸு உண்டு – 'தத்திதம்', 'க்ருத்', 'ஸுப்', 'திங்' என்றெல்லாம். நம் கதையில் விஷயமாவது 'நிஷ்டா' என்ற ப்ரத்யயம். மூலச் சொல்லான பகுதி ('ப்ரக்ருதி') என்பது ஒரு வினைச் சொல்லின் தாதுவாக இருக்க வேண்டும். அதோடு நிஷ்டா ப்ரத்யயத்தைச் சேர்த்தால் அந்த வினைச்சொல் செயப்படு பொருளாகிவிடும். உதாஹரணமாக 'புஜ்' என்பது ஒரு க்ரியா பத (வினைச் சொல்லின்) தாது. சாப்பிடுவதை அது குறிக்கும். 'புஜித்தான்', 'போஜனம்' என்பதெல்லாம் 'புஜ்'ஜின் அடியாக வந்தவைதான். இந்த 'புஜ்' தாதுவோடு நிஷ்டா ப்ரத்யயம் சேர்த்தால் 'புக்தம்' என்றாகும். 'புக்தம்' என்றால் 'சாப்பிடப்பட்டது'. இதே மாதிரிதான் 'ரக்தம்' (சிவப்பாக் கப்பட்டது) 'ஸிக்தம்' (நனைக்கப்பட்டது) ஆகிய வார்த்தைகளும் உண்டாவது. இதிலிருந்து நிஷ்டா ப்ரத்யயம் சேர்த்தால் மூலச்சொல்லின் முடிவு 'க்த' என்று மாறும் என்று தெரிகிறதல்லவா? ஆனால் இதற்கு ஒரு விலக்கு உண்டு. அங்கே 'க்த' என்று ஆகாமல் 'க்வ' என்றாகும். 'பச்' (சமையல் பண்ணு) என்பதுதான் விதிவிலக்கான அந்த தாது. அதுமட்டும் நிஷ்டா ப்ரத்யயம் சேர்த்தால் 'பக்தம்' என்று ஆகாமல் 'பக்வம்' என்றாகும். 'சமைக்கப்பட்டது' என்று அர்த்தம். 'பக்குவம்' என்று தமிழில் நாம் சொல்வது அதுதான். கெட்டியாக, ஜீர்ணிக்க முடியாமலிருக்கிற அரிசி, கறிகாய் முதலியவை 'பக்வ'மாகும்போது ம்ருதுவாவதுபோல ஒருவர் மனஸின் வறட்டுத்தனம் போய் நல்ல கனிவாக ஆகும்போதுதான் 'பக்குவமானவர்' என்பது.

'பச்' தாதுவோடு சேரும்போது மட்டும் நிஷ்டா ப்ரத்யயம் 'க்த' என்றாகாமல் 'க்வ' என்றாவதைத் தெரிவிப்பதாகப் பாணினியின்

வ்யாகரண ஸூத்ரங்களில் ஒரு தனி ஸூத்ரமே இருக்கிறது: 'பசோ வ:' என்பதாக. 'க்த'வில் வரும் 'த்'வுக்குப் பதில் இங்கே மட்டும் 'வ'.

இந்த விதிவிலக்கு விஷயம் ரொம்பப் பேருக்குத் தெரியாது. அதனால் பதஞ்ஜலி, கௌடர் ப்ரம்ம ரக்ஷஸான பின் இதைப் பற்றியே கேள்வி கேட்க வேண்டும் என்று நினைத்து, அதன் வழியாகவே சாப விமோசனத்தை அமைத்தார்.

கௌடரிடம், 'நீ சொல்லிக் கொள்ளாமல் வெளியேறியதால் ப்ரம்ம ரக்ஷஸாகப் போகத்தான் வேண்டும். ஆனாலும் அதற்கு நிவ்ருத்தி சொல்கிறேன். உன்னிடம் அகப்படுபவரிடம் 'பச்' தாதுவுக்கு நிஷ்டாவில் ரூபம் என்ன?' என்று கேள். அது தெரிந்து, மற்ற வார்த்தைகளைப் போல 'பக்தம்' என்று சொல்லாமல் 'பக்வம்' என்று ஒருவர் சொல்வாரேயானால் அவருக்கு மஹா பாஷ்யம் முழுவதையும் கற்றுக் கொடு. பாத்ரமறிந்து வித்யையைக் கொடுத்த புண்ய விசேஷத்தால் சாபத்துக்கு விமோசனம் ஏற்பட்டுவிடும். ரக்ஷஸ் ரூபம் போய் நிஜ ரூபம் பெற்றுவிடுவாய். ஸரியாகப் பதில் சொல்பவர் வருகிறவரையில் உன்னிடம் மாட்டிக் கொண்டு தப்பாகப் பதில் சொல்கிறவர்களையே ப்ரம்ம ராக்ஷஸ ரூபத்தில் உனக்கு ஆஹாரமாக்கிக் கொள்' என்று சொன்னார்.

கௌடர் ப்ரம்ம ரக்ஷஸாக மாறினார். அப்படியே காற்றில் பறந்து போக ஆரம்பித்தார்.

கௌடர், கௌடர் என்று அவர் பிறந்த தேசத்தை வைத்துத்தான் பெயர் சொல்லத் தெரிகிறதேயொழிய அவருடைய நிஜப்பெயர் தெரியவில்லை!

'அரியக்குடி', 'செம்மங்குடி' என்று ஸங்கீத வித்வான்களில் இருப்பது போல ஆசார்ய புருஷர்களில் 'கௌடர்'!

ஒரு காரணம் தோன்றுகிறது: அவ்வளவாகப் புத்தி ப்ரகாசமில்லாததால் இவரைக் குறிப்பிட்டுப் பேர் சொல்லிப் பேச எதுவுமிருந்திருக்காது போலிருக்கிறது. நூறோடு நூற்றியொண்ணு என்று இருந்திருக்கிறார். 'பாவம், இந்த லக்ஷணத்தில் தூர தேசமான கௌட தேசத்திலிருந்து வந்திருக்கிறாரே!' என்பதை நினைத்து கௌடர் என்றே குறிப்பிட்டிருப்பார்கள் போலிருக்கிறது. அதுவே நிலைத்துவிட்டது.

ப்ரம்ம ரக்ஷஸாகிய கௌடர் காற்றில் பறந்து நர்மதை நதிக்கரைக்கு வந்து சேர்ந்தார். அங்கே ஓர் அரசமரம் இருந்தது. பழமை வாய்ந்த அரசமரம். அந்த மரத்தில் உட்கார்ந்து கொண்டார்.

அந்த இடத்தை ஏன் தேர்ந்தெடுத்தாரென்றால், அது பஞ்ச கௌட தேசங்களுக்கும், பஞ்ச திராவிட தேசங்களுக்கும் மத்தியில் இருந்தது. ஆகையால் உத்தர தேசத்திலிருந்து தக்ஷிண தேசத்துக்குப் போகிறவர்களிலும் ஸரி, தக்ஷிணத்திலிருந்து வடதேசம் போகிறவர்களிலும் ஸரி, ரொம்பப் பேர் அந்த வழியாகத்தான் போவார்கள். சாஸ்த்ராப்யாஸம் செய்பவர்களும் பலபேர் வித்யையை நாடி இப்படி அந்த மார்க்கமா

சுத்தான் தினமும் போய்க் கொண்டிருந்தார்கள். ஆகையால், ப்ரம்ம ரக்ஷஸாக அத்யயனக்காரர்களும், அவர்களில் தன்னுடைய ப்ரம்ம ராக்ஷஸ ரூபத்தை நீங்கச் செய்யக்கூடிய உயர்ந்த படிப்பாளியும் இங்கே தான் கிடைப்பார்கள் என்பதால்தான் இந்த இடத்தைத் தேர்ந்தெடுத் தார்.

அங்கே வ்ருக்ஷத்தில் ஏறி உட்கார்ந்துகொண்டு வழிப்போக்கர் களைக் கூப்பிட்டுக் கேள்வி கேட்பார். குரு சொல்லிக் கொடுத்த கேள்வி தான் – 'பச்' தாதுவுடன் நிஷ்டா ப்ரத்யயம் சேர்ந்தால் என்ன என்ற கேள்வி.

ரொம்ப நாள் அந்த வழிப்போக்கர்களில் எவருக்கும் இவருடைய கேள்விக்கு சரியாக பதில் சொல்லத் தெரியவில்லை. இவர் அவர்களை அடித்துப் போட்டு ஆஹாரம் பண்ணி வந்தார்.

ஒரே மாதிரி ஸ்பெல்லிங் உள்ள வார்த்தைகளெல்லாம் ஒரே மாதிரி உச்சரிப்பு (ப்ரொனௌன்ஸியேஷன்) இல்லாமல் மாறுபடுவதை இங்கிலீஷில் நிறையப் பார்க்கிறோம். B-u-t என்பது 'பட்' என்றும் c-u-t என்பது 'கட்' என்றும் ஆகிறாற்போல் p-u-t என்பது 'பட்' என்று ஆகாமல் 'புட்' என்று ஆகிறது. ஒரு குழந்தையிடம் நாம் அடுத்தடுத்து 'b-u-t-க்கு என்ன உச்சரிப்பு? c-u-t-க்கு என்ன உச்சரிப்பு?' என்று கேட்டு விட்டு 'p-u-t-க்கு என்ன?' என்று தொடர்ந்தால் பட், கட் என்று சொல்லிவந்த அந்த வேகத்திலே அது 'பட்' என்றே சொல்லும். ரொம்பவும் பரிச்சயமில்லாத விஷயமானால், குழந்தைதான் என் றில்லை, பெரியவர்களுக்கும்கூட இப்படிக் குளறிப் போய்விடும்.

நல்ல அறிவாளியாகத் தேர்ந்தெடுத்தே மஹாபாஷ்ய உபதேசம் செய்ய வேண்டுமென்று ப்ரம்மரக்ஷஸுக்கு இருந்ததால், (நிஷ்டா ப்ரத்யய விஷயமாக) அவ்வளவு சிறந்த அறிவாளியாக இல்லாதவர்கள் குளறிப் போகும்படியாகக் கேள்வி கேட்பார். என்ன பண்ணுவாரென் றால், 'புஜ்'ஜின் நிஷ்டா ரூபம், 'ஸிச்'சின் நிஷ்டா ரூபம் முதலானவை என்ன என்று கேட்டுப் பதில் சொல்கிறவர் 'புக்தம்', 'ஸிக்தம்' என்றெல் லாம் சொல்லி வரும்போதே சட்டென்று 'பச்'சின் நிஷ்டா ரூபத்தைக் கேட்பார். ஸாதாரணமாகவே ரொம்பப் பேருக்கு அதற்குள்ள விதிவிலக்குத் தெரியாது. தெரிந்தவருங்கூட இவர் இப்படி அதே மாதிரியான மற்ற வார்த்தைகளைப் பற்றிக் கேட்ட வேகத்திலேயே இதையும் கேட்கும்போது அவஸரத்தில் குளறிப் போய் 'பக்தம்' என்று சொல்லிவிடுவார்கள்.

ப்ரம்மரக்ஷஸ் சிரித்து, 'பக்தமா? இல்லை; பக்வம். நீயும் நம் போஜனத்துக்குப் பக்(கு)வம்தான்' என்று சொல்லி தப்புப் பதில் சொன்னவனை ஆஹாரம் செய்துவிடும்.

இப்படியே ரொம்பக் காலம் போயிற்று. அனேக வருஷங்களாகி விட்டன.

அப்புறம் ஒரு நாள் ஸர்வ லக்ஷணமாக ப்ரஹ்ம தேஜஸோடு கூட ஒரு பிள்ளையாண்டான் அந்த வழியே போனான்.

அவன் காஷ்மீரத்தைச் சேர்ந்தவன்*. தேசத்தின் அந்தக் கோடியி லிருந்தவன் காதுக்கும் 2000 மைல் தாண்டிச் சிதம்பரத்தில் பதஞ்ஜலி மஹாபாஷ்ய பாடம் சொல்லும் ஸமாசாரம் எட்டியிருந்தது. தானும் கற்றுக்கொள்ள வேண்டுமென்றே இந்த மார்க்கமாகப் போய்க் கொண் டிருந்தான்.

அவனைப் பார்த்ததும் கௌட ப்ரம்மரக்ஷஸுக்கு ரொம்ப ஸந்தோஷமாயிற்று. 'எத்தனை காந்தியான ரூபம்! இன்றைக்கு நமக்கு முதல் தர விருந்து!' என்ற ஸந்தோஷம்!

வழக்கம் போல் ஒரு பிராமண வேஷம் எடுத்துக் கொண்டு போய் அந்தப் பிள்ளையின் முன்னால் நின்றார். வழக்கமான கேள்வியையும் கேட்டார் – நிஷ்டா ப்ரத்யயம் சேர்த்து அனேகத் தாதுக்களின் ரூபத் தைக் கேட்டுவிட்டு, அந்த ஸ்பீடிலேயே 'பச்'சின் நிஷ்டா ரூபத்தையும் கேட்டார்.

ஆனால், வழக்கத்துக்கு வித்யாஸமாக அந்தப் பிள்ளை 'பக்தம்' என்று உளறாமல், குளறாமல் 'பக்வம்' என்ற சரியான பதிலைச் சொன் னான்!

அப்படி அவன் சொன்னதால், 'இவனை ஆஹாரம் பண்ண முடியாதே!' என்று கௌட ப்ரம்ம ரக்ஷஸ் வருத்தப்பட்டதா என்றால், படவில்லை! ஏனென்றால் இப்போது, 'இவன்தான் தக்க பாத்ரம்' என்று அவனிடம் மஹாபாஷ்யத்தை ஒப்புக் கொடுத்துவிட்டு ப்ரம்ம ராக்ஷஸ ஸ்திதியிலிருந்து விமோசனம் பெற்றுவிடலாமே என்பதில் மஹத்தான சந்தோஷமே உண்டாயிற்று!

'நீ யார்? எங்கே போகிறாய்?' என்று கேட்டார்.

'என் பேர் சந்த்ர சர்மா★. சிதம்பரத்தில் பதஞ்ஜலி, வ்யாகரண பாஷ்ய பாடம் நடத்துகிறாராம். அதைக் கேட்பதற்காகப் போய்க் கொண்டிருக்கிறேன்' என்று அந்தப் பிள்ளை சொன்னான்.

'சிதம்பரத்து ஸமாசாரமெல்லாம் மலையேறிவிட்டது! ஆனால், மஹாபாஷ்யம் மட்டும் இங்கே என்னிடம் இருக்கிறது! அவ்வளவு தூரம் போய் நீ தெரிந்து கொள்ள வேண்டியில்லாமல் இங்கேயே நான் கற்றுக் கொடுக்கிறேன். இந்தப் பெரிய நிதியைப் பெற யோக்யதை யுள்ளவன் வருவானா வருவானா என்றுதான் வருஷக் கணக்காகக் காத் துக் கொண்டிருக்கிறேன். இன்றைக்குத்தான் சரியான சிஷ்யனாக நீ வந்து சேர்ந்தாய். பதஞ்ஜலி மஹர்ஷி என்னொருத்தனுக்கு மட்டும் தந்த நிதியை நான் உன்னொருத்தனுக்கு மட்டும் கொடுக்கிறேன். உன்னாலும் உனக்கப்புறமும் அது பல பேரிடம் பரவட்டும். உட்கார். உபதேசம் பண்ணுகிறேன்' என்று கௌடர் சொன்னார்.

'கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது' என்பது போலப்

---

* உஜ்ஜயினி என்றும் சொல்வதுண்டு.

★ சந்திர குப்த சர்மா என்று பதஞ்சலி சரித்திரத்தில் உள்ளது.

போகிற வழியிலேயே மஹா பாஷ்ய உபதேசம் கிடைப்பதில் சந்த்ர சர்மா என்று பெயர் சொல்லிக்கொண்ட அந்த யுவா ரொம்பச் சந்தோஷமடைந்தார்.

ஆனாலும் ப்ரம்ம ரக்ஷஸை குருவாகக் கட்டிக்கொண்டு அழுவதென்பது ஸுலபமாக இருக்கவில்லை! ராக்ஷஸ குரு கஷ்டமாக அனேகக் கண்டிஷன்கள் போட்டார்!

ப்ரம்ம ராக்ஷஸ ரூபம் எடுக்க வேண்டுமென்று கௌடருக்குச் சாபம் இருந்ததால் அதனுடைய விசித்ரமான க்ரூர ஸ்வபாவப்படிதான் அவர் இருக்க வேண்டியதாயிற்று.

'நான் அந்த அரச மரத்தில் உட்கார்ந்து கொண்டுதான் பாடம் சொல்வேன். இப்போதே ஆரம்பித்துவிடுவேன். எனக்கு எப்போது இஷ்டமோ அப்போதுதான் முடிப்பேன். விடாமல் சொல்லிக் கொண்டே போவேன். நீயும் மரத்தில் என்னோடு உட்கார்ந்து கொண்டுதான் கேட்டுக்கணும், அல்லது எழுதிக்கணும்! எத்தனை நாளானாலும், ராப்பகல் பார்க்காமல் நான் சொல்லிக்கொண்டே போனாலும், அத்தனை நாளும் நீ மரத்தைவிட்டு இறங்காமல் எழுதிக் கொண்டு போகணும்! நடுவில் இறங்கப்படாது, தூங்கப்படாது, சாப்பிடப் படாது!' என்றிப்படிக் கண்டிப்பாகக் கண்டிஷன் போட்டார்.

சந்த்ர சர்மா ஒப்புக்கொள்கிறது தவிர, வேறே ஒன்றும் பண்ணிக் கொள்வதற்கில்லை. அவருக்கோ மஹாபாஷ்யம் கற்றுக் கொண்டேயாக வேண்டும் என்று அவர். கற்றுக் கொடுக்கவோ இந்த ப்ரம்மரக்ஷஸ் தவிர, வேறு எவருமில்லை என்றால் என்ன பண்ணுவது?

வித்யையிலுள்ள ஆர்வத்தால் கண்டிஷனுக்கெல்லாம் கட்டுப்பட்டார்.

அரச மரத்தின்மேலே விசித்ரமாக குரு-சிஷ்யாளின் க்ளாஸ் ஆரம்பித்தது!

குருவானால் கிடுகிடுவென்று பாடம் டிக்டேட் பண்ண ஆரம்பித்து விட்டார். எழுதிக்கொள்ள சிஷ்யருக்குப் பேனாவா, இங்க் பாட்டிலா - இல்லை, அந்தக் கால ஏடா, எழுத்தாணியா - எதுவுமே இல்லை. எங்கேயாவது போய் வாங்கி வரலாமென்பதற்குமில்லாமல், மரத்தை விட்டு இறங்கக் கூடாதென்று கண்டிஷன்!

சந்த்ர சர்மா தயங்கவில்லை - தன்னுடைய தொடையைக் கீறிக் கொண்டார். ரத்தம் வந்தது. அதுதான் இங்க்! அரசிலைக் காம்பை ஒடித்துப் பேனாவாக்கிக் கொண்டார்! பேப்பர் என்னவென்றால் அந்த அரசிலைகளேதான்!

ரக்ஷஸ் சொல்லிக்கொண்டே போக அவர் காம்பை ரத்தத்தில் தோய்த்துத் தோய்த்து இலைகளில் எழுதிக் கொண்டே போனார்.

ராவும் பகலுமாக குரு நிறுத்தாமல் இப்படி ஒன்பது நாள் டிக்டேட் செய்ய, ஆடாமல் அசராமல், ஆஹார நித்ரைகளும் இல்லாமல் சிஷ்யர் தொடர்ச்சியாக இலைகளில் எழுதிக் கொண்டார். வித்யையைப் பெறு

வதற்காக இத்தனை தியாகம், தபஸ்!

ஒருவாறாக வ்யாகரண பாஷ்யம் முழுவதும் சொல்லித் தீர்த்தா யிற்று.●

சந்த்ர சர்மா அரசிலைகளை மூட்டை கட்டினார். அதிலிருந்து கிடைத்திருப்பதுதான் இன்றைக்கு நம்மிடம் வந்துள்ள 'மஹாபாஷ்யம்'. பாடம் சொல்லித் தீர்த்தத்துடன் கௌடருக்கும் ப்ரம்ம ரக்ஷஸ ரூபம் தீர்ந்தது.

முன்னே நம் குரு பரம்பரைக் கதையில் மித்ரஸஹன் ராக்ஷஸரூபம் பெற்றபோது சக்தி மஹர்ஷியின் அனுக்ரஹத்தால் அந்த ரூபம் நீங்கி அவருடைய சிஷ்யனானதாகப் பார்த்தோம். இப்போது சந்த்ர சர்மாவால் குருவுக்கு ரக்ஷஸ ரூபம் நீங்கிற்று!

தம் குரு கொடுத்த பெரிய காரியத்தை முடித்தாகிவிட்டதென்றதும் கௌடருக்கு மனஸ் ஆத்யாத்மிகமாகத் திரும்பிற்று. 'இனி விவேக வைராக்கியங்கள் பெற வேண்டும். ஞானம் பெற வேண்டும். ஆத்ம த்யானம் பண்ண வேண்டும். அதற்கு ஓர் உத்தம குருவை அடைந்து உபதேசம் பெற வேண்டும்' என்று எண்ணினார்.

பரம உத்தமமான குரு ஜீவன் முக்தராகவே இருப்பவர், யார் என்று விசாரித்தார். சுகாசார்யாள் அப்படி இருப்பதாகத் தெரிந்து கொண் டார். ஜன்மா எடுக்கும்போதே ஆத்ம ஞானியாயிருந்த அவரையே ஆசார்யராக வரித்து, அவரிடம் உபதேசம் வாங்கிக்கொள்ள முடிவு செய்தார்.

அப்போது சுகர் பத்ரிகாச்ரமத்தில் இருப்பதாகத் தெரிந்தது. உடனே கௌடர் நர்மதா தீரத்திலிருந்து ஹிமாசலத்தில் சுகரிருந்த இடத்துக்குப் போய் அவரிடம் சரணாகதி செய்தார்.

சுகர் அவருக்கு சன்னியாஸம் கொடுத்து ஞானோபதேசம் செய்தார்.

உபதேசம் பண்ணியவர் பிறவி ப்ரஹ்ம ஞானி. வாங்கிக் கொண்டவ ரும் ஸத் பாத்ரம். ஆகையால் கௌடரும் ப்ரஹ்ம ஞானம் பெற்றார்.

அப்படியே ஆத்ம நிஷ்டையில் ஆழ்ந்து போய் பத்ரிகாச்ரமத்தி லேயே தங்கிவிட்டார். பிற்காலத்தில் இதே சந்த்ரசர்மாவுக்கு ஸன்னியாஸாச்ரமம் கொடுத்து, ப்ரஹ்ம வித்யையை உபதேசித்தார். அதனால் 'கௌடபாதாசார்யாள்' என்பதாக ப்ரஹ்ம வித்யா குரு பரம்பரையில் இடம் பெற்றார்.

ஆசார்ய பரம்பரையில் புராண பாத்ரங்களான தெய்வ புருஷர் களாகவும் ரிஷிகளாகவும் இருந்தவர்களின் வரிசை சுகரோடு முடிந்து, நம் போன்ற மனிதர்கள் 'மாதிரியே பூலோகத்தில் நடமாடி வாழ்க்கை நடத்திய 'மானவ ஸம்ப்ரதாய' ஆசார்ய வரிசை கௌடபாதாசார் யாளிலிருந்துதான் ஆரம்பித்தது.

முழுக்க முழுக்க அத்வைதமாக எழுதப்பட்ட முதல் புஸ்தகம் கௌட பாதர் எழுதியதுதான் என்று இப்போது பிலாஸஃபி ப்ரொஃபஸர்

● 'பதஞ்சலி சரிதத்தில் (V-32) இரண்டு மாதங்கள் எனக் காணப்படு கிறது.

களாக உள்ள சிலர் சொல்கிறார்கள். அந்தப் புஸ்தகம் மாண்டூக்யோப நிஷத் காரிகா என்பது.

ஆத்ம தத்வத்தை விசாரித்துக் கொண்டுபோய் அது சாந்தம்-சிவம்-அத்வைதம்-துரீயம் (விழிப்பு, கனவு, உறக்கம் ஆகிய மூன்றும் கடந்த ஆத்ம ஸ்தானமே துரீயம்) என்று முடிவதாகச் சொல்கிற உபநிஷத்து இந்த மாண்டூக்யம்தான். அதற்குக் 'காரிகை' என்பதான வ்யாக்யான வகையில் எழுதப்பட்டதே 'மாண்டூக்யோபநிஷத் காரிகா'.

'யாப்பருங்கலக்காரிகை' என்று தமிழில் கேள்விப்பட்டிருக்கலாம். செய்யுள் வகைகளைப் பற்றிச் சொல்வதாக 'யாப்பருங்கலம்' என்று ஒரு நூல் உண்டு. அதன் விளக்கமாக எழுதியதே 'யாப்பருங்கலக் காரிகை'.

மாயையினால் உண்டாவதே த்வைதம். அதற்குக் கொஞ்சங்கூட இடம் தராமல் அடித்துப் போட்டுப் பரம அத்வைதமாக எழுதப்பட்ட நூல் 'மாண்டூக்ய காரிகை'. அதன் முதல் பிரிவுக்கு 'ஆகம ப்ரகரணம்' என்று பெயர் கொடுத்திருப்பதால் முழுப்புஸ்தகத்தையுமே 'ஆகம சாஸ்த்ரம்' என்றும் சொல்வதுண்டு. சாதாரணமாக ஆகம சாஸ்த்ரம் என்றால் ஒரு தெய்வத்தின் வழிபாட்டு முறை. அத்வைத வேதாந்தத்தில் 'ஆகம சாஸ்த்ரம்' என்றால் அது கௌடபாத காரிகைதான்.

இதில் மாயைக்கு இடமே கொடுக்காத கௌடபாதரே மாயா ஸ்வரூபிணியாகவும் ப்ரஹ்ம வித்யா ஸ்வரூபிணியாகவும் ஒரே ஸமயத்தில் இருக்கும் அம்பாளிடம் பரம பக்தி பண்ணி ஸ்ரீ வித்யா தந்த்ரத்தைச் சேர்ந்த 'ஸுபகோதயம்' முதலான க்ரந்தங்களை உபகரித்தாரென்றும் சொல்லப்படுகிறது.

கர்மா, பக்திகளில் பக்குவப்பட்டு நிவ்ருத்தி மார்க்கத்தில் ப்ரவேசித்த பிறகு ஆத்ம ஞானம் ஸித்திக்கும்வரை லோகத்தை – அதாவது த்வைத லீலையை – மாயை என்று அப்படியே தள்ள வேண்டியதுதான். இந்த லோகத்தை நடத்தும் ஈச்வரனை உபாஸிப்பதற்கும் அப்போது இடமில்லை. ஆனால், ஞானம் வந்த பிறகு மாயை ஒருத்தரை மயக்கி ஸம்ஸாரத்தில் தள்ள முடியாது. அதனால் தைரியமாக மாயாலோக விளையாட்டுப் பார்க்கலாம். அந்த விளையாட்டைப் பண்ணும் ஈச்வரனையும் பலவிதமாகப் பக்தி பண்ணி அனுபவித்து மகிழலாம். ஆத்மா என்று ஞானி அனுபவிப்பதும் ஈச்வரனுடைய நிர்குண ஸ்வரூபம்தான். அதோடுகூட அவனுடைய ஸகுண லீலையும் ஞானி அனுபவித்து ஆனந்தப்பட்டு அவனை ஸ்துதிக்கவும் முடியும். இது ஞானியுடைய சொந்த விஷயம். அதோடு, ஞானி மாயாலோகத்தைப் பார்க்க ஆரம்பித்த பிறகு அதிலுள்ள ஜனங்களிடம் தன்னியல்பாக அவனுக்கு ஒரு கருணை பிறக்கும். அப்போது அவர்களை நல்வழியில் அழைத்துக் கொண்டு போக வேண்டும் என்பதற்காகவும் பக்தியிலேயே ஈடுபடக் கூடியவர்களான அவர்களை உத்தேசித்து அவனும் பக்தனாக நடந்து கொண்டு பக்தி ஸ்துதிகள், பூஜா க்ரமங்கள் ஆகியவை செய்வதும் உண்டு.

ஞான ஸ்வரூபியான சுகர்தான் பாகவத உபதேசம் பண்ணியவர்.

அத்வைத ஸ்தாபனாசார்யாள் எனப்படும் ஆசார்யாளோ ஸ்தோத்ரம் பண்ணாத தெய்வமே இல்லை! ஷண்மத ஸ்தாபனமே வேறே பண்ணி யிருக்கிறார்! கௌட பாதாளைப் பற்றியும் அந்த மாதிரிச் சொல்வதில் நடக்கக் கூடாததாக எதுவுமில்லை.

மேற்கு ஸமுத்ரக்கரையில் கொங்கண தேசத்தில், கோவாவிலுள்ள ஷிரோதா என்ற இடத்தில் 'கௌட பாதாசார்ய மடம்' என்றே ஒன்று இருக்கிறது. கௌட ஸாரஸ்வதர்கள் என்பவர்கள் அதை ஆச்ரயித்தவர் கள். இதிலே தேசிய ஒற்றுமை! எப்படியென்றால், கொங்கணம் இருப் பது பஞ்ச த்ராவிடத்தைச் சேர்ந்த கர்நாடக பார்டர், கௌடர், ஸாரஸ்வதர் என்பவர்கள் பஞ்ச கௌடர்களைச் சேர்ந்தவர்கள்! நம் குரு பரம்பரையில் ஆசார்யாள் த்ராவிடர்; கோவிந்த பகவத்பாதர் காஷ்மீரியானால் ஸாரஸ்வதர்; கௌட பாதர் கௌடரே!



## ஆசார்யாளின் போற்றுதல்

கௌடபாதரின் 'மாண்டூக்ய காரிகா'வுக்கு ஆசார்யாள் பாஷ்யம் பண்ணியிருக்கிறார். அதை முடிக்கும்போது, 'அம்ருதம் சாப்பிட்டதால் அமரர் என்றே பேர் பெற்ற தேவ ஜாதிக்கும் கிடைக்கவொண்ணாத ஞானாம்ருதத்தை ஸம்ஸார ஸாகரத்தில் உழலும் மனுஷ்ய ஜாதிக்குப் பரம கருணையால் கொடுத்தவர்' என்று கௌட பாதரை ஸ்தோத்ரம் செய்கிறார். தம்முடைய (குருவின் குருவாகிய) பரம குருவான அவர் பூஜ்யர்களுக்குள்ளேயும் மஹா பூஜ்யர் என்று கொண்டாடி, 'அவரு டைய பாதங்களில் விழுந்து நமஸ்கரிக்கிறேன்' என்று சொல்கிறார்.

**'பூஜ்யாபிபூஜ்யம் பரமகுரும்-அமும் பாதபாதைர் நதோஸ்மி'**

ஜனங்கள் ஸம்ஸார ஸாகரத்தில் ஜனன-மரண முதலையின் பிடியில் அகப்பட்டுக் கொண்டு அவஸ்தைப்படுகிறார்கள். அப்போது – ஆசார்யாள் வாக்குப்படி – கௌட பாதர் கருணாவசமாகி என்ன பண்ணுகிறார்? வேதம் என்று இன்னொரு ஸாகரம் இருக்கிறது. அது க்ஷீர ஸாகரம். அதில் தம்முடைய ஞானம் என்ற மந்த்ர மலையைப் போட்டுக் கடைந்து அத்வைதாம்ருதம் எடுக்கிறார். அதை ஜனங்களுக் குக் கொடுத்து ஜனன-மரண நிவ்ருத்தி அளிக்கிறார்! இப்படி ஆசார்யாள் கௌடபாதரை ஸ்துதித்திருக்கிறார்.★

'பாத(da)-பாத(ta)' என்றால் 'காலில் விழுந்து'. அத்தனை மரியாதை யாக ஆசார்யாள் தம்முடைய பரம குருவுக்கு நமஸ்காரம் செய்கிறார்.

---

★ ப்ரஜ்ஞா-வைசாக-வேத- க்ஷுபித-ஜலநிதேர்-வேத- நாம்நோ-(அ)ந்தரஸ்தம்
பூதாற்-யாலோக்ய மக்நாந்-யவிரத-ஜநந-க்ராஹ-கோரே ஸமுத்ரே ।
காருண்யாதுத்த தாராம்ருதம்-இதம்-அமக்ஷர்-திர்லபம் பூதஹேதோ:
யஸ்தம் பூஜ்யாபி பூஜ்யம் பரமகுருமமும் பாதபாதைர்-நதோஸ்மி॥

இவர் யார் பாதத்தில் விழுகிறாரோ அவர் கௌடபாதர்! மஹான் களின் பேரோடு 'பாத' என்று சேர்த்துச் சொல்வது வழக்கம். 'அடிகள்' என்பதும் அதே அர்த்தம்தான். பகவானின் பாதத்தில் நம்மைச் சேர்ப் பிப்பதற்காக நாம் யாருடைய பாதத்தில் விழவேண்டுமோ அவர் களையே 'பாதர்' என்பது.

இங்கே, கௌடபாதரின் பாதத்தில் விழுகிறவரோ பகவத் பாதர்! (அதாவது) நாம் முடிவாகப் பிடிக்கவேண்டிய ஈச்வர சரணாரவிந்தத் தின் ஸ்வரூபமாகவே இருப்பவர்.

ஆசார்யாளுக்கும் அவருடைய நேர் குருவுக்கும் மட்டும்தான் 'பகவத்பாத' சேர்த்து, ஸ்ரீ சங்கர பகவத்பாதர், ஸ்ரீ கோவிந்த பகவத் பாதர் என்று சொல்வது. மற்றவர்களுக்கு (பகவத் சேர்க்காமல்) 'பாத' மட்டுந்தான் சேர்த்துச் சொல்வது.

புஸ்தகங்களின் முடிவில் – ஒவ்வொரு அத்யாய முடிவி லுமே – 'இன்னாருடைய சிஷ்யரான இன்னாரால் பண்ணப்பட்ட இன்ன புஸ்தகத்தில் இன்ன அத்யாயம், அல்லது புஸ்தக ஸமாப்தி' என்று போடுவது வழக்கம். அதற்குப் 'புஷ்பிகை' என்று பெயர். Colophon என்பது. ஆசார்யாளின் புஸ்தகங்களில் அப்படிப் போடும் போது அவரை 'பகவத்பாதர்' என்று சொல்லாமல் 'பகவான்' என்றும் 'சங்கர பகவத:' என்றும், அவருடைய குருவைத்தான் பகவத்பாதர் – பகவத் பூஜ்யபாதர் – என்றும் குறிப்பிடுவதாக நெடுங்கால வழக்கம் இருந்து வருகிறது – 'இதி ஸ்ரீ கோவிந்த பகவத் பூஜ்யபாத சிஷ்யஸ்ய ஸ்ரீ சங்கர பகவத: க்ருதௌ' என்று.

கௌடபாதர் கதையை அவர் பத்ரிகாச்ரமத்தில் ஆத்ம நிஷ்டையில் உட்கார்ந்து விட்டாரென்று முடித்தோம்.

இங்கே நர்மதா தீரத்திலிருந்த சந்த்ர சர்மா என்ன ஆனார்? அவர் எப்போது கோவிந்த பகவத் பாதரானார்?

மஹாபாஷ்ய உபதேசமான பின் அவர் என்ன ஆனர் என்று சொல் வதற்கு முன்னால் அவர் பிறப்பதற்கு முன்னால் யாராக இருந்தார் என்று சொல்ல வேண்டும்.

முன் ஜன்மாவில் இந்த சந்த்ர சர்மாவேதான் பதஞ்ஜலியாக இருந்த வர்!

சாபம், அனுக்ரஹம் என்று எதிரெதிரான இரண்டும் கொடுக்கும் சக்தி மஹான்களுக்கு உண்டு. பதஞ்ஜலி இரண்டையும் கௌட சிஷ்ய ருக்குப் பண்ணினாரல்லவா? ப்ரஹ்ம ரக்ஷஸாகப் போகும்படி அவருக்கு சாபமும் கொடுத்து, வ்யாகரண உபதேச அனுக்ரஹமும் பண்ணினா ரல்லவா? அதற்கப்புறம் சாப நிவ்ருத்திக்காக அவர் சொன்னபடி அந்த சாஸ்த்ரத்தை ப்ரஹ்மரக்ஷஸிடமிருந்து பெற்றுக் கொள்ளக்கூடிய தகுதி வாய்ந்த எவருமே ரொம்ப வருஷங்கள் வரவில்லை என்றும் சொன்னே னல்லவா? அதைப் பார்த்துப் பதஞ்ஜலி மஹர்ஷிக்குக் கவலை பிடித் துக் கொண்டது. 'என்னடா இது? பகவான் உத்தரவின் பேரில் நாம் மஹா பாஷ்யப் புத்தகம் பண்ணியும் லோகம் அதனால் ப்ரயோஜனம் அடையாமல் வருஷக் கணக்காகப் போய்க் கொண்டிருக்கிறதே!' என்று

விசாரப்பட்டார். சாஸ்த்ரமும் ப்ரசாரமாகணும்; சிஷ்யனுக்கும் சாப மோசனம் ஏற்படணும்; ஆனால், இரண்டையும் செய்யக்கூடியவனாக எவனுமே அகப்பட மாட்டான் போலிருக்கிறதே! என்று நினைத்துக் கடைசியில் பதஞ்ஜலியேதான் சந்த்ர சர்மாவாக அவதரித்தார்! பதஞ்ஜலியாக இருந்தபோது யார் சிஷ்யராயிருந்தாரோ அவரிடமே சிஷ்யராகித் தாம் பண்ணின மஹாபாஷ்யத்தையே கற்றுக்கொண்டு, அரசிலைகளில் எழுதிக் கொண்டார்.

இவரே பண்ணினதுதானே, அதை எழுதி வைத்துக் கொள்வானேன் என்றால், அவதாரமானால்கூட அவதரிப்பதற்குப் பூர்வ காலத்தில் நடந்ததெல்லாம் அப்படியே ஞாபகமிருக்குமென்று சொல்ல முடியாது. மனுஷ உடம்பில் வந்ததால் அதன் குறைபாடுகள் கொஞ்சமாவது இருக்கிறாற்போலத்தான் அவதாரங்களும் காட்டும். அதனால்தான் பதஞ்ஜலி அவதாரமே பதஞ்ஜலியிடம் பாடம் கேட்கச் சிதம்பரம் போனது! வழியிலேயே பாடத்தை எழுதி மூட்டை கட்டிக் கொண்டார்.

ப்ரஹ்மரக்ஷஸ் கௌடரூபம் பெற்று ஞானாசார்யனைத் தேடிக் கொண்டு புறப்பிட்ட பின் சந்த்ர சர்மாவும் மரத்திலிருந்து இறங்கினார். இலை மூட்டையைத் தூக்கிக்கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டார். அனேக நாட்களாகச் சாப்பாடும் தூக்கமும் இல்லாமலிருந்ததற்கெல்லாம் சேர்த்து வைத்து ரொம்பக் களைப்பாக ஆயிற்று. மூட்டையைப் போட்டுவிட்டு அப்படியே பூமியில் சாய்ந்து நன்றாகத் தூங்கிப் போய் விட்டார்.

அந்தப் பக்கமாக ஓர் ஆடு வந்தது. அது இலை மூட்டையை மேய ஆரம்பித்தது.

எத்தனையோ விக்னங்கள், கஷ்டங்களுக்குப் பிறகு மஹாபாஷ்யம் ஒருவாறு ரத்தத்தில் தோய்த்து எழுதி வைக்கப்பட்டும் அது பூர்ணமாக லோகத்துக்குக் கிடைக்கவில்லை! ப்ரபஞ்ச லீலையில் இப்படியெல்லாம்தான் பகவான் அப்பப்போ காட்டுவது! நல்லது என்பதும் நிறைவாக நடக்காமல் மூளியாகி விடுகிறது! எத்தனை சொன்னாலும் ப்ரபஞ்சமே அபூர்ணம்தான். இதை விட்டால்தான் பூர்ணம் என்று காட்டுவது போல் ப்ரபஞ்சத்தில் உசந்த விஷயங்கள் என்று நினைப்பவைகளும் வீணாய்ப் போவதைப் பார்க்கிறோம்.

ஆடு இலை மூட்டையில் ஒரு பாகத்தைத் தின்றுவிட்டது.

அது போன பாக்கிதான் இப்போது லோகத்துக்குக் கிடைத்திருக்கிறது. இல்லாத பாகத்துக்கு 'அஜ பக்ஷித பாஷ்யம்' என்றே பெயர்! (அஜ-ஆட்டினால், பக்ஷித-சாப்பிடப்பட்ட.)

சந்த்ர சர்மா எழுந்திருந்தார். எத்தனையோ ச்ரமப்பட்டு எழுதினதில் ஒரு பாகம் பறிபோயிருந்ததைப் பார்த்தார். என்ன பண்ணுவது? மிஞ்சியதையாவது ரக்ஷித்துக் கொடுக்க வேண்டுமென்று நினைத்தார். களைப்பைப் பொருட்படுத்தாமல் மூட்டையைத் தூக்கிக்கொண்டு புறப்பட்டார்.

உஜ்ஜயினிக்கு வந்தார்.

களைப்புத் தாங்க முடியவில்லை. ஒரு வைச்யனுடைய வீடு வந்தது. அங்கே மூட்டையை ஜாக்ரதையாக வைத்து விட்டுத் திண்ணையில் படுத்துக்கொண்டார். அடித்துப் போட்டதுபோல நன்றாக தூங்கிப் போய்விட்டார்.

அவர் பாட்டுக்கு நாள் கணக்கில் தூங்கிக் கொண்டிருந்தார்.

அந்த வைச்யனுக்கு ஒரு புத்ரி இருந்தாள். அவள் அவரைப் பார்த்தாள். ப்ரியம் ஏற்பட்டது. எழுப்பிப் பார்த்தாள். அவர் எழுந்திருக்கவே இல்லை. 'மஹாதேஜஸ்வியாக இருக்கிறார். ஆனால், இப்படி ப்ரக்ஞையே இல்லாதவராக, அன்ன ஆஹாரமின்றித் தூங்குகிறாரே! இவருடைய ப்ராணனை ரக்ஷிக்க வேண்டும்' என்று நினைத்தாள்.

அவளுக்கு வைத்தியம் தெரியும். அதனால், என்ன பண்ணினாளென்றால், தயிரும் சாதமுமாக நன்றாகப் பிசைந்து கொண்டு வந்தாள். அதை சந்த்ர சர்மாவின் வயிற்றில் பூசி நன்றாகத் தேய்த்தாள்.

ரோமகூபத்தின் (மயிர்க்கால்களின்) வழியாக அன்னஸாரம் சரீரத்துக்குள் இறங்கிற்று.

இப்படி ஒரு சிகித்ஸை நம்முடைய வைத்ய சாஸ்த்ரத்தில் இருக்கிறது. தற்காலத்தில் ஊசி வழியாகக் குத்தி இஞ்ஜெக்ட் செய்கிறார்கள். இப்படிச் செய்வதில் குத்துவதான ஹிம்ஸை இருக்கிறது. சரீரத்தில் புதிதாக த்வாரம் செய்வதாகவும் இருக்கிறது. நம்முடைய வைத்ய முறையிலோ இயற்கையாகவுள்ள ரோமகூபத்தின் வழியாகவே ஸத்தை உள்ளே இறக்க வழி சொல்லியிருக்கிறது. இப்போதும் மலையாளத்தில் நவரக்கிழி என்று செய்கிற சிகித்ஸை இதைப் போன்றதுதான்.

வைச்யப் பெண் இப்படி விடாமல் சில நாட்கள் செய்து வந்ததில் சந்த்ர சர்மாவுக்குத் தெம்பும், விழிப்பும் ஏற்பட்டன.

விழித்துக் கொண்டவர் முதலில் இலை மூட்டை ஜாக்ரதையாக இருக்கிறதா என்றுதான் பார்த்தார். ஜாக்ரதையாகவே இருந்தது. (சிரித்து) இவரும் ஜாக்ரத் ஸ்திதி (விழிப்பு நிலை) பெற்றிருந்தார்; மஹாபாஷ்ய மூட்டையும் ஜாக்ரதையாக இருந்தது!

அதை எடுத்துக்கொண்டு சந்த்ர சர்மா கிளம்பினார்.

வீட்டுக்காரனான வைச்யன் அவரைத் தடுத்து நிறுத்தினான். 'என்ன ஓய், கிளம்பிவிட்டீர்? என் புத்ரியாக்கும் குற்றுயிராகக் கிடந்த உம்மை எத்தனையோ ச்ரமப்பட்டுக் காப்பாற்றி உயிர் கொடுத்திருக்கிறாள். உம்மை விவாஹம் செய்துகொள்ள வேண்டும் என்ற ஆசையில்தான் அவள் சிகித்ஸை செய்து ப்ராண ரக்ஷணை பண்ணியது. நீரானால் கிளம்புகிறீரே!' என்றான்.

வைச்யப் பெண்ணை பிராமணர் கல்யாணம் பண்ணிக் கொள்ளவாவது என்று நினைக்கலாம். நாம் ரொம்பக் காலத்துக்கு முன்னால் இருக்கிறோம் என்பதை மறந்து போகக்கூடாது. நம் நம்பிக்கைப்படி நமக்குக் கிடைத்திருக்கிற ஆதாரங்களின்படி ஆசார்யாள் அவதாரம் செய்தே

2500 வருஷமாகிறது. அவருடைய குருவான கோவிந்த பகவத் பாதர் பூர்வாச்ரமத்தில் சந்த்ர சர்மாவாக இருந்த காலத்தை இப்போது பார்த்துக் கொண்டிருக்கிறோம். பிற்பாடு அவர் கோவிந்த நாமத்துடன் ஸன்னியாஸியாகி எத்தனை வருஷத்துக்கப்புறம் ஆசார்யாள் அவரிடம் உபதேசம் பெற வந்தாரோ? யோக ஸித்தர்களான கௌட பாதர், கோவிந்த பகவத் பாதர் முதலானவர்கள் நூற்றுக்கணக்கான வருஷங்கள்கூட ஆத்ம நிஷ்டர்களாக இருந்திருக்கலாம். நாம் பார்த்த கதைகளின்படி அவர்களுடைய பூர்வாச்ரம காலத்தில் 72 துர்மதங்கள் பரவியிருந்ததாகத் தெரியவில்லை. மூலமான ஸனாதன தர்மமே அனுஷ்டானத்திலிருந்து வந்ததாகத்தான் தெரிகிறது. அதனால் அவர்கள் த்வாபர-கலியுக ஸந்தியில் அவதரித்த சுகாசார்யாளை அடுத்துச் சில வருஷங்களில், அதாவது கலி ஆரம்ப காலத்திலேயே பிறந்தவர்களாகவும் இருக்கலாம். அதாவது, கலி புருஷன் வாலைச் சுருட்டி வைத்துக் கொண்டிருந்த காலத்திலேயே அவர்களுடைய பூர்வாச்ரம வாழ்க்கை நிகழ்ச்சிகள் நடந்திருக்கலாம்.

5,000-10,000 வருஷங்களுக்கு முற்பட்ட - அப்போது ப்ரஹ்ம தேஜஸை நன்றாகக் கட்டிக் காப்பாற்றிய சக்தர்களாகப் பல பிராமணர்கள் இருந்திருப்பார்கள்...

ஒன்று சொல்வதுண்டு: நெருப்பு பெரிசாயிருந்து ஜலம் கொஞ்சமாயிருந்தால் நெருப்பு ஜலத்தை வற்றடித்துவிட்டு, தான் நன்றாக ஜ்வலித்துக் கொண்டிருக்கும். மாறாக ஜலம் நிறையவும் நெருப்பு சின்னதாகவுமிருந்துவிட்டால் ஜலம் நெருப்பை அணைத்துவிடும். ப்ரஹ்ம தேஜோக்னி நிரம்ப இருந்தால் அப்போது பிராமணரளவுக்கு சாஸ்த்ரங்களில் ஆசார பரிசுத்தி நிர்ணயிக்கப்படாத இதர ஜாதியாரோடு சில அத்யாவச்யங்களில் பிராமணர்கள் விவாஹமும், வம்சோத்பத்தியும் செய்துகொண்டாலுங்கூட இவர்களுடைய ஆசார அக்னியின் வீர்யத்தில் மற்றவர்களின் ஆசாரக் குறைவு அடிபட்டுப் போய் அவர்களும் பரிசுத்தி பெறுவார்கள். இப்படித்தான் பூர்வ காலங்களில் இருந்தது. நல்ல இந்த்ரியக் கட்டுப்பாட்டுடன் ப்ரஹ்ம வர்சஸ் நிரம்பியவனாக ஒரு பிராமணன் இருக்க வேண்டும்; அவனுக்கு ஸொந்தத்தில் தன-தார-புத்ராதி ஆசைகள் இருக்கப்படாது; அப்படி ஒருவன் இருந்தால் பிற ஜாதிகளிலும் நல்ல உத்தமமான ஜீவர்கள் தோன்றி அந்தக் குலங்கள் மேன்மை அடைய வேண்டுமென்று அவனிடம் அந்த ஜாதிக்காரர்களும் ப்ரார்த்தனை செய்துகொண்டு தங்களுடைய கன்னிகைகளை அர்ப்பணம் செய்வார்கள். அவனும் அந்தப்படி பண்ணிவிட்டு, புத்ரோத்பத்தி ஆனவுடனோ, அல்லது புத்ரனுக்கு உரிய வயஸு வந்தவுடன் வித்யோபதேசம் கொடுத்துவிட்டோ, அப்புறம் கொஞ்சங்கூப் பற்றில்லாமல் புறப்பட்டுவிடுவான். பூர்வ யுகங்களில் இருந்துவந்த இந்த வழக்கம், ப்ரஹ்மவர்சஸ் குறைந்து கொண்டே போகும் கலியில் நிஷேதம்தான் (அனுஷ்டிக்கத் தக்கதல்ல என்று விலக்கப்பட்டதுதான்). ஆயினும் யுகத்தின் ஆரம்பமான ஆயிரம், ஆயிரத்தைந்நூறு வருஷம் கலியின் தலைவிரிகோல ஆட்டம் தொடங்காதபோது இது ஓரளவு அனுமதிக்கப்பட்டிருக்க வேண்டும்.

இது பிற்காலத்துக்கு, தற்காலத்துக்கு நிச்சயமாக நிஷேதம்தான். ஆசார்யாள் தம்முடைய காலத்தவர்களையே 'அல்பவீர்யத்வாத்', 'ஹீநவீர்யேஷு வா வார்த்தமா நிகேஷு மநுஷ்யேஷு' என்றெல்லாம் ப்ரம்ம தேஜோவீர்யம் குறைந்து போனவர்களாகத்தான் சொல்லியிருக்கிறார்*. அந்தத் தேஜஸை அவர் மறுபடியும் ஜ்வலிக்கச் செய்தாரென்றாலும், அப்புறம் மறுபடியும் மங்கி மங்கிப் போய், இப்போது உள்ளவர்களைப் பற்றிக் கேட்கவே வேண்டாம்! அதனால் இப்போது வர்ண ஸாங்கர்யம் (ஜாதிக் கலப்பு) செய்வது கொஞ்சநஞ்சம் இருக்கும் ப்ரம்ம தேஜஸையும் மற்றவர்களின் குறைவான ஆசாரத்தால், ஜலத்தைக் கொட்டி நெருப்பை அணைப்பதுபோல, போக்கடிப்பதாகத்தான் ஆகும்.

சந்த்ர சர்மாவின் காலத்தில், ஒருவருடைய சொந்த இச்சைக்காக இல்லாமல், சில அத்யாவச்யங்களை முன்னிட்டு பிராமணர்கள் இதர கன்னிகைகளை அங்கீகரிக்கும் வழக்கம் இருந்திருக்க வேண்டும்.

அதனால்தான் அந்த வைச்யன் அவரிடம் அப்படிச் சொன்னது. அவருக்கா, அந்த மாதிரி விஷயத்தில் மனஸ் போகவேயில்லை. அரும்பாடுபட்டுத் தாம் ஸம்பாதித்த மஹாபாஷ்யத்தை ஸத்-சிஷ்யர்களுக்குக் கொடுத்து ப்ரசாரம் பண்ண வேண்டுமென்பதிலேயே அவருடைய எண்ணமிருந்தது. 'அத்தனை கஷ்டமெல்லாம் பட்டது பந்தத்தில் மாட்டிக் கொள்ளத்தானா?' என்று நினைத்து, 'உம் பெண்ணைக் கல்யாணம், கார்த்திகை பண்ணிக் கொள்ளும் உத்தேசம் நமக்கில்லை' என்று சொல்லிப் புறப்படுவதிலேயே மும்முரமாக இருந்தார்.

இப்படி அவர் சபலமில்லாமல் கட்டுப்பாட்டுடன் இருந்ததாலேயே இவ்வளவு உசந்த ஜீவனை அடைந்துதான் தீர்வது என்று அந்தப் பெண்ணுக்கும் அவளுடைய தகப்பனுக்கும் பிடிவாதம் ஏற்பட்டது!

'உமது ப்ராணன் இவள் போட்ட பிச்சை! நன்றி வேண்டாமா? உம்மை டிமான்ட் பண்ண எங்களுக்கு ரைட் இருக்கிறது. வாரும் ராஜ ஸபைக்கு! ராஜாக்ஞைப்படி வழக்கைத் தீர்த்துக் கொள்வோம்' என்று வைச்யன் விடாப் பிடியாகச் சொல்லிவிட்டான்.

அப்படியே தீர்ப்புக்காக ராஜாவிடம் போனார்கள்.

நல்ல லக்ஷணமாக, ஆசார காந்தியுடனும், வித்யா சோபையுடனும் இருந்த சந்த்ர சர்மாவை ராஜா பார்த்தான். பார்த்தானோ இல்லையோ, வைச்யன் கேஸை எடுப்பதற்கு முந்தியே அவனுக்கு வேறே யோசனை தோன்றிவிட்டது! 'மஹா தேஜஸ்வியாக இருக்கிறாரே. நாம் நம்முடைய குமாரிக்கு எங்கெங்கேயோ வரன் தேடிக் கொண்டிருக்கிறோமே! அதெல்லாம் எதற்கு? இந்த பிராமண யுவனுக்கே கன்யாதானம் பண்ணிவிடுவோம். அதற்கு தர்ம சாஸ்திரம் இடம் கொடுக்கிறதா என்று மந்திரியைத் தருவித்துக் கேட்போம்' என்று

---

*ப்ரஹதாரண்யக பாஷ்யம் 1. 4.10.

நினைத்தான். 'யார் அங்கே? மந்திரியை அழைத்துக்கொண்டு வாருங்கள்' என்றான்.

அப்படியே மந்திரி வந்தான். மந்திரிகள் பிராமணர்களாகத்தான் இருப்பார்கள். இந்த பிராமண மந்த்ரி வந்தவுடன் சந்த்ர சர்மாவைப் பார்த்தான். அவருடைய அழகில் அவனும் வசீகரமானான். வேடிக்கை என்னவென்றால் அவனுக்கும் விவாஹ வயஸில் பெண் இருந்தாள். 'ஓஹோ! ராஜாவே நம் விஷயம் தெரிந்துகொண்டு நமக்கு மாப்பிள்ளையாகத்தான் அந்தப் பையனைத் தேர்ந்தெடுத்துவிட்டு நம்மை கூப்பிட்டனுப்பியிருக்கிறார் போலிருக்கிறது! நம் நல்ல காலம்!' என்று நினைத்தான்.

ராஜா தன்னுடைய பெண் விஷயமாகத் தர்ம சாஸ்த்ரக் கருத்தைக் கேட்டான்.

ப்ரஹ்ம தேஜஸில் நல்ல வீர்யவத்தான பிராமணர்கள் விஷயத்தில் அப்படிச் செய்ய சாஸ்த்ரத்தின் அனுமதி இருப்பதைச் சொன்ன மந்திரி, நான்கு வர்ணங்களைச் சேர்ந்த கன்னிகைகளையும் ஒரே முஹூர்த்தத்தில் ஒரு பிராமண வரனுக்குக் கல்யாணம் செய்துகொடுக்க இடமிருப்பதாகச் சொன்னான். தன்னுடைய பெண்ணையும் அப்படிக் கன்யாதானம் செய்து கொடுக்க ஆசைப்படுவதாக விஞ்ஞாபித்துக் கொண்டான்.

'பாதிக் காரியம் முடிந்தது; க்ஷத்ரியப் பெண், பிராமணப் பெண் ஆகிய இரண்டு பேர் கிடைத்துவிட்டார்கள்' என்று ராஜா சந்தோஷமாக ஒப்புக்கொண்டான்.

எதிர்பார்க்காமல் இப்படி ஒரு புதிய காரணமும் கிடைத்த சந்தோஷத்தோடு வைசியன் தன்னுடைய வழக்கையும் ராஜாவின் முன் வைத்தான். முக்கால் காரியமும் இவ்வளவு 'ஈஸி'யாக முடிகிறதே என்று நினைத்த ராஜா அவனுக்கு அனுகூலமாகத் தீர்ப்பு பண்ணினான்.

இந்த மாதிரி ஒன்றையொட்டி ஒன்றாகத் திருப்பம் ஏற்பட்டதைப் பார்த்த சந்திரசர்மா, 'இப்படித்தான் ஈச்வர ஸங்கல்பமென்று தெரிகிறது. அதனால் நாம் ஒன்றும் முரண்டு பண்ண வேண்டாம். நடக்கிறபடி நடக்கட்டும்' என்று விவேகமாக விட்டுவிட்டார். மாமனார்களாவதற்கு மூன்று பேரும் போட்ட ஜாயின்ட் மனுவுக்குத் தலையாட்டிவிட்டார்! மனு ராஜாக்ஞையாகவுமல்லவா வந்துவிட்டது!

முக்கால் காரியத்தை முழுசாகப் பூர்த்தி செய்ய நாலாவது வர்ணத்தைச் சேர்ந்த ஒரு நல்ல குணமுள்ள பெண்ணும் வந்து சேர்ந்தாள்★. தபஸ்விகளாக இருப்பவர்களுக்கு வெண்ணெய் கொண்டுபோய் ஸமர்ப்பணம் பண்ணுவதையே தொழிலாகக் கொண்டிருந்த ஒரு பெண் அவள். அவளுடைய கைங்கர்யத்தில் அவர்கள் சந்தோஷப்பட்டு, ஸத்பிராமணராகிய சந்த்ர சர்மாவை அடையாளம் சொல்லி, அவளு

---

★ 'பதஞ்சலி சரிதத்தில்' ப்ரம்மராக்ஷஸிடம் சந்திர சர்மா பாடம் முடித்ததை அடுத்தே நான்காம் வர்ணப் பெண் அவரிடம் தன்னை அர்ப்பணம் செய்துகொள்கிறாள்.

டைய புண்ய விசேஷத்தால் அவரையே பதியாக அடைவாள் என்று ஆசீர்வாதம் செய்திருந்தார்கள். அதன்படி அவள் வந்து தன்னை அங்கீகரிக்கும்படி அவரிடம் ப்ரார்த்தித்துக் கொண்டாள்.

ராஜாக்ஞைக்கு மேலே ஈச்வராக்ஞையே இதுவெல்லாம் என்ற 'ஸ்பிரிட்'டில் சந்த்ர சர்மா ஒப்புக் கொண்டார்.

கல்யாணமே வேண்டாமென்றவர் ஒன்றுக்கு நாலாகப் பண்ணிக் கொண்டார்.

க்ருஹஸ்தாச்ரம தர்மத்தைப் பரிபாலிக்க வேண்டும், தனக்குப் பத்னி களானவர்களின் குலங்களும் ஸத்பிரஜைகளால் சோபிக்க வேண்டும் என்று, ஒவ்வொருத்தியிடமும் ஒரு புத்ரனை ஜனிக்கச் செய்தார்.

அந்தப் பிள்ளைகளெல்லாம் நல்ல புத்திமான்களாக இருந்தனர். சந்த்ர சர்மா அவர்களுக்குத் தாம் கற்ற மஹா பாஷ்யத்தை நன்றாகக் கற்றுக் கொடுத்தார். அப்புறம், 'இவர்கள் மூலம் இனி அது ப்ரசார மாகிவிடும். நம் காரியம் ஆகிவிட்டது. இன்னும் குடும்பவாழ்வு வேண்டாம். ஆத்மாவைக் கடைத்தேற்றிக் கொள்ள வழி தேடுவோம்' என்று வீடு வாசலைவிட்டுக் கிளம்பிவிட்டார்.

தர்மானுஷ்டானத்தைப் பரம்பரையாகக் காப்பாற்றிக் கொடுக்க ஒரு பிள்ளையே போதும். முதலில் பிறக்கும் புத்ரன்தான் அப்படிப் பட்ட 'தர்மஜன்'. அப்புறம் பிறப்பவர்கள் 'காமஜர்'கள்தான் – ஒருவனு டைய சொந்த இச்சைப் பூர்த்திக்காக உண்டானவர்கள்தான். அதனால் தான் ஜ்யேஷ்ட புத்ரனுக்கே கர்மாதிகாரம் கொடுத்திருப்பது. நம்பூதிரி பிராமணர்களில் ஜ்யேஷ்ட புத்ரனுக்குத்தான் சொத்துரிமை. ஏனென் றால் பிதுரார்ஜித ஸொத்தும் தர்மானுஷ்டானத்துக்காகத்தான் ஏற் பட்டது. மற்ற பிள்ளைகளை சரீர ஸம்ரக்ஷணை பண்ணி வளர்த்து, அப்புறம் அவரவரே ஸ்வயமாக ஸம்பாதித்துத் தன் காலில் நிற்கும் படியாக விட்டு விடுவார்கள். ராஜ்யாதிகாரம் மூத்த பிள்ளைக்கு மட் டுந்தானே கொடுக்கப்படுகிறது? பல பிள்ளைகளுக்குப் பிரித்துத் தரப் படுவதில்லையே, அப்படி!

ஒவ்வொரு பத்னியிடமும் ஒவ்வொரு புத்ரன் உண்டான பிறகு சந்த்ர சர்மா இந்த்ரிய நிக்ரஹத்தோடு இருந்துவிட்டார். அவருடைய மேதா விலாஸத்தின் காரணமாகப் பிள்ளைகளும் குழந்தையாயிருக்கும் போதே நல்ல புத்திசாலித்தனத்தைக் காட்டியதால், தம் ஒருவரிடமே இருந்த பெரிய நிதியான மஹாபாஷ்யத்தை ப்ரசாரம் செய்ய வேண் டிய கடமையும் தமக்கிருப்பதை நினைத்து, 'அதை இந்தப் பிள்ளை களுக்குக் கற்பித்துவிடவேண்டும். அப்புறம் அவர்கள் அதைப் பரப்பு வதாக இருக்கட்டும்' என்று தீர்மானித்தார். அதற்காக மேலும் சில வருஷங்கள் பல்லைக் கடித்துக்கொண்டு க்ருஹத்தில் இருந்துவிட்டு,

பாடம் முடிந்ததும் ஸன்னியாஸியாவதற்குப் புறப்பட்டுவிட்டார்.●

வீட்டை விட்டுப் புறப்பட்ட சந்த்ர சர்மா யாரிடம் ஞானோபதேசம் வாங்கிக் கொண்டு ஸன்னியாஸியாக வேண்டுமென்று நினைத்தாரென்றால், ஆதிகாலத்தில் தமக்கு மஹாபாஷ்யம் உபதேசித்த கௌடரிடமிருந்தேதான்! வித்யா குருவையே சன்னியாஸ குருவாகவும் கொள்ள எண்ணினார். கௌடர் பதரிகாச்ரமத்துக்குப் போய்ப்ரம்ம நிஷ்டரான சுகரிடம் ஸன்னியாஸம் வாங்கிக்கொண்டு தாமும் ப்ரம்ம நிஷ்டையில் போய்க் கொண்டிருக்கிறாரென்று தெரிந்து அங்கே போனார் முன்னே அவர். இவரைக் கேள்வி கேட்டது 'நிஷ்டை'

---

● பதஞ்ஜலி சரிதத்தில் சொல்லியுள்ளபடி சந்திர சர்மாவுக்கு பிராமண பத்னியிடம் பிறந்த பிள்ளைதான் வரருசி என்ற பேரறிவாளர். இவரே வியாகரணத்தில் பாணினிக்கும் பதஞ்ஜலிக்கும் அடுத்தபடியாகப் போற்றப் படும் காத்யாயனர் என்றும் கூறுவர். விக்ரமாதித்தனின் வித்வத் ஸபையை அலங்கரித்த 'நவரத்தின'ங்களில் ஒரு ரத்தினம் இவர். இவரை ஆதரித்த அந்த விக்ரமாதித்ய மஹாராஜனேதான் சந்திர சர்மாவுக்கு க்ஷத்ரிய மனைவியிடம் பிறந்த பிள்ளை என்கிறது 'பதஞ்ஜலி சரிதம்.' அதன்படி வைசிய மனைவிக்குப் பிறந்தவர் பட்டி; நான்காம் வர்ணத்தவளுக்குப் பிறந்தவர் பர்த்ருஹரி. பட்டி, விக்ரமாதித்யனின் மதிமந்திரியாக விளங்கிய வர். அதோடுகூட ராமாயணக் கதையின் மூலம் வியாகரண விதிகளை விளக்குவதான 'பட்டி காவ்யம்' என்ற சாதுரியமிக்க நூலை எழுதியிருக் கிறார். பட்டி காவ்யமும் பர்த்ருஹரி எழுதியதுதானென்றும், அது விக்ரமா தித்யனுக்கு ஏழு நூற்றாண்டுக்குப் பிற்பட்ட வலபி மன்னன் தாரஸேனனின் காலத்தில் எழுதப்பட்டதென்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். நான்கு புதல்வர் களிலும் முதலிடம் பெற்றுள்ளவர் பர்த்ருஹரியே. அவர் முறையே கவியாக வும், அறநெறியாளராகவும், ஆன்ம சிந்தனையாளராகவும் இருந்து இயற்றிய ச்ருங்கார சதகம், நீதி சதகம், வைராக்ய சதகம் ஆகிய நூல்கள் அந்தந்தத் துறையில் இணையற்றவையாக விளங்குகின்றன. இவரும் வியாகரணத்துக் குத் தொண்டாற்றியுள்ளார் – 'வாக்யதீபம்' என்ற நூலை அளித்து, அவர் அத்வைதக் கருத்துக்களுக்கும் நெருக்கமாகச் சென்றவர்.

நம்முடைய சாஸ்திரக்ஞர்களின் கணக்குப்படியே விக்ரமாதித்ய சகாப்தம் என்பது கி.மு. 57-ல் தான் ஆரம்பித்திருக்கிறது. ஆசார்யாளின் அவதாரமோ கி.மு. 509-ல் என்ற கருத்தைத்தான் ஸ்ரீசரணர்கள் ஆமோதித்துப் பேசுவது. எனவே எட்டு வயதுச் சங்கரர் விக்ரமாதித்யனின் தந்தையாகப் பூர்வாச்ரமத் தில் இருந்த கோவிந்த பகவத் பாதரிடம் துறவுத் தீக்ஷை பெற்றாரென்பது நம் முடைய காலக் கணக்குக்கு ஒத்து வரவில்லை. இதனால், பதஞ்ஜலி சரிதத் தில் சந்திரசர்மாவின் நான்கு புத்ரர்கள் யாரார் என்று கூறியிருப்பது வினா வுக்குரித்தாகிறது. இது காரணமாகவே ஸ்ரீ சரணர்கள் அதிலுள்ளபடி அவர் கள் பெயரைக் கூறாமல் விட்டிருக்கக்கூடுமென்று ஊகிக்கலாம்.

ஆயினும் 'பதஞ்ஜலி சரித'த்தை ஸ்ரீ சரணர்கள் பலமுறை குறிப்பிட்டிருப் பதாலும், அதில் சொல்லும் நால்வரை உடன்பிறந்தவர்களாகக் கூறும் வழக்கு இந்தியா முழுவதிலுமே பரவலாக இருப்பதாலும் இவ்விவரத்தைக் கொடுத்திருக்கிறோம்.

என்ற ப்ரத்யயம் பற்றி! இப்போது இவர் அவரிடம் அனுபவ பாட மாகப் பெற விரும்பியது ப்ரஹ்ம 'நிஷ்டை'!

ஞானியாக ஹிமோத்கிரியில் ஸஞ்சாரம் பண்ணிக் கொண்டிருந்த கௌடருக்குப் பூர்வ கால சிஷ்யரைப் பார்த்ததும் சந்தோஷமாயிற்று. மனஸார அனுக்ரஹம் பண்ணி ஸன்னியாஸாச்ரமம் கொடுத்தார்.

அதிலிருந்து சந்த்ர சர்மாவுக்கு அந்தப் பேர் போய், 'கோவிந்த பகவத் பாதர்' என்று பெயர் ஏற்பட்டது.

க்ருஷ்ணர்தான் ஜகத்குரு. அவருடைய நாமாக்களில் கோவிந்தன் என்பது விசேஷமானது.★.

ஜகத்குருவான க்ருஷ்ணரின் பேராகவுமிருக்கிறது, தம்முடைய நேர் குருவின் பேராகவுமிருக்கிறது என்பதால் ஆசார்யாளுக்கு கோவிந்த நாமாவில் ஓர் அலாதியான பற்றுதல் உண்டு. 'பஜ கோவிந்தம், பஜ கோவிந்தம், பஜ கோவிந்தம்' என்றே ஒன்றுக்கு மூன்று தடவையாக லோகமெல்லாம் கோஷிக்கும்படியாகப் பாடி வைத்துவிட்டார்!



## குரு பரம்பரையில் ஸன்னியாஸிகள்

நாராயணனிலிருந்து ஆரம்பித்து சுகாசார்யாள் வரையில் நம்முடைய குரு பரம்பரையில் எவரும் நாம் நினைக்கிறபடி ஸன்னியாஸியாக இருக்கவில்லை. அவர்களில் எவரும் தலையை முண்டனம் பண்ணிக்கொண்டு காஷாயம் கட்டிக் கொண்டு, பூணூலை அறுத்துப் போட்டவர்களில்லை. பேசாத ஆதி குரு தக்ஷிணாமூர்த்தியுங்கூடத் தான்! அவர், நாராயணன், ப்ரம்மா ஆகியவர்கள் தெய்வங்களாகவே இருந்தவர்கள். தெய்வங்கள் மனிதர்கள் மாதிரி நான்கு ஆச்ரமம் வஹிப்பதில்லை. வஸிஷ்டர், சக்தி, பராசரர், வ்யாஸர் ஆகிய நாலு பேரும் ரிஷிகள் என்னும்படியாகவே இருந்தவர்கள். ரிஷிகளையும் விஷயம் தெரிந்தவர்கள் மனுஷ்ய ஜாதியுடன் சேர்க்காமல், தேவ ஜாதி போல இன்னொரு தனி இனமாகத்தான் சொல்வார்கள். ஆகாசத்தில் ஈச்வரனின் ச்வாஸம் மந்த்ரங்களின் ரூபத்தில் இருப்பதைத் தங்களுடைய அதீந்த்ரிய சக்தியால் கண்டு, க்ரஹித்து, லோகத்துக்கு அந்த மந்த்ரங்களை வெளியிட்டுப் பரமோபகாரம் செய்தவர்களே ரிஷிகள். அதனால் ரிஷி என்பதற்கு இலக்கணம் 'மந்த்ர-த்ரஷ்டா' (மந்த்ரத்தைக் கண்டு கொள்ளக்கூடியவர்) என்று சொல்லியிருக்கிறது. இப்பேர்ப்பட்ட சக்தியைப் பெற்ற ஒருவர் மனுஷ்ய ஜாதியின் எல்லைக்கு

---

★ கோவிந்த நாம விசேஷம் குறித்து அருள் உரை 81-வது புத்தகத்தில் இடம்பெற்றுள்ள கோவிந்த-ஹரநாமச்சிறப்பு, குறைவொன்றுமில்லாத கோவிந்தா, மூன்றில் ஒன்று ஆகிய உரைகளைப் பார்க்கவும்.

அப்பாற்பட்ட ஸ்திதிக்குப் போய்விடுகிறார். ஞானத்ருஷ்டி முதலான அனேக தெய்விக சக்திகள் வாய்க்கப்பட்ட அந்த ரிஷிகளைத் தனி வர்க்கமாகத்தான் சொல்லியிருக்கிறது. தெய்விகம், மானுஷம், ஆஸுரம் (என்பதாக முறையே தெய்வத்தைக் குறித்தது, மனிதரைக் குறித்தது, அஸுரரைக் குறித்தது) என்று மூன்று 'க்ளாஸ்'களைச் சொன்னதோடு நிறுத்தாமல், 'தெய்விக'த்துக்கு அடுத்தாற்போலவும், 'மானுஷ'த்துக்கு முந்தியதாகவும் 'ஆர்ஷம்' என்றும் ஒரு தனி 'க்ளாஸ்' சொல்லியிருக்கிறது. 'ஆர்ஷம்' என்றால் ரிஷிகளைக் குறித்தது என்று அர்த்தம்.

இப்படி மனித ஜாதிக்கு மேலே போன ரிஷிகளாகவே வஸிஷ்டரி லிருந்து வ்யாஸர் வரை இருந்தார்கள். அவர்களில் யாரும் பூணூலை அறுத்துப் போட்டுவிட்டு, தலையை மொட்டையடித்துக் கொண்டு, காவி கட்டிக்கொண்டிருந்த ஸன்னியாஸிகளாக இல்லை.

ஆனாலும் இவர்கள் எல்லாரும் ப்ரம்ம ஞான ஸித்தி பெற்றவர்கள். அதாவது மனிதராகப் பிறந்தவர்கள் ஸன்னியாஸம் வாங்கிக்கொண்டு அடைகிற லக்ஷ்யம் எதுவோ அதை அடைந்தவர்கள்.

(தக்ஷிணாமூர்த்தி, நாராயணன், ப்ரம்மா ஆகிய தெய்வங்களின் ப்ரஹ்ம ஞானத்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதேயில்லை.)

அப்புறம் சுகர், அவர் எப்படியிருந்தார்? அப்படி, இப்படி, எப்படி என்று எதுவுமே சொல்ல முடியாத அத்வைத நிலையிலேயே கர்ப்பத்தில் தோன்றிய நாளாக இருந்தவரவர். அவரும் தலையை மொட்டை அடித்துக் கொண்டதாகச் சொல்லியிருக்கவில்லை. காஷாயமும் கட்டிக் கொள்ளவில்லை. எந்த வஸ்த்ரமுமே கட்டிக் கொள்ளவில்லை. ஸ்த்ரீ-புருஷ பேதங்களே அடியோடு தெரியாதவராக இருந்ததால் குழந்தை போல வஸ்த்ரமே இல்லாமல் அவர் பாட்டுக்கு ஸஞ்சாரம் பண்ணிக் கொண்டிருந்தார். 'அவதூதர்', 'திகம்பரர்' என்று சொல்கிறபடி இருந்தார்.

அவதூதர் என்றால் ஸகலத்தையும் விட்டுவிட்டவர். 'திகம்பரர்' என்பதில் 'திக்', 'அம்பரம்' என்று இரண்டு வார்த்தைகள் இருக்கின்றன. 'திக்' என்றால் திசை. (தமிழில் திக்கு என்கிறோம்.) 'அம்பரம்' என்றால் வஸ்த்ரம். 'பீதாம்பரம்' என்கிறோம். 'பீத'மான, மஞ்சள் கலரான அம்பரம் – மஞ்சள் வஸ்திரம்தான் பீதாம்பரம். திகம்பரமென்றால்? திசைகளே வஸ்திரம்! அப்படியென்றால்... எட்டுத் திசையும் நம்மை எப்போதும் சூழ்ந்திருக்கின்றன. வஸ்திரம் போட்டுக் கொண்டுள்ள போது முதல் சுற்றாக நம்மை வஸ்திரம் சூழ்ந்துகொண்டு விடுகிறது. அப்புறம்தான் திக்கும் சூழ்வது. வஸ்திரத்தை அவிழ்த்துவிட்டால் திக்குகளே நேராக நம்மைச் சூழ்ந்துவிடுகின்றன. அதைத்தான் 'திகம்பரம்' என்பது. அப்படியிருப்பவர் திகம்பரர். நிர்வாணமாயிருப்பவர் என்று சொல்கிறோம். (சிரித்து) ப்ரம்ம நிர்வாணம் என்னும் ஸத்ய ஸத்யமான நிலையிலேயே ஸதாவும் இருந்த சுகர் வஸ்திரமில்லாமலும் நிர்வாணமாயிருந்தார்!

ஜைன மதத்தையும் பௌத்த மதத்தையும் ஒன்று மாதிரியே இணைத்துப் பேசுவது வழக்கம். ஜைனர்களில் வஸ்த்ரமில்லாமலிருக் கும் பிரிவினரே ஜாஸ்தி. 'ச்ரமணர்' எனப்படும் அவர்களைத் தமிழில் சமணர் என்றும் அமணர் என்றும் சொல்வார்கள். அதனாலேயே நிர்வஸ்திரமாகியிருப்பது 'அ(ம்)மணம்' எனப்படுகிறது. அமணர்களு டைய லக்ஷ்யத்தை பௌத்தர்களின் நிர்வாணத்தோடு ஒன்றுபடுத்தியே, அம்மணமாயிருப்பதை நிர்வாணம் என்றும் சொல்வதாயிற்றோ என் னவோ?

நிர்வாணம் என்பதற்கு நேர் அர்த்தம், 'தீபத்தை ஊதி அணைப் பது'. ஒரே சூடாக தஹித்துக்கொண்டு, ப்ரகாசித்துக் கொண்டிருந்த சுடர் அடியோடு இல்லாமலே போய்விடுவதுதான் நிர்வாணம். இப்படி அக்னியை க்ஷணத்தில் அடியோடு இல்லாமல் பண்ணிவிடுகிற மாதிரி வேறே எதையும் பண்ண முடியாது. ஜலத்தைக் காய்ச்சி, கீய்ச்சிப் பொங்க வைத்துத்தான் வற்றடித்து இல்லாமல் பண்ணணும். இப்ப டியே மற்ற பூதங்களையும். அப்போதுங்கூட அவையெல்லாம் அணுக் களினால் ஆனதால், நாம் அழிந்துவிட்டதாக நினைத்த பிறகும், நம் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் வேறே ரூபத்தில் இருந்துகொண்டு தானிருக்கும். Matter-ஐ destroy பண்ணவே முடியாது என்று சொல்கிறார் கள். அக்னி அணுக்களாலானது அல்ல. (அக்னி எரிவதற்குத்தான் ஆக்ஸிஜன் வேண்டுமே தவிர, அக்னியே ஆக்ஸிஜன் அணுக்கள்தான் என்று நினைத்துவிடக்கூடாது.) அணுக்களால் உண்டாகாததால் அக்னி யைத்தான் அடியோடு ரூபமே இல்லாமல் பண்ணி அழிக்க முடிகிறது. அம்மாதிரி அணைந்து போவதுதான் நிர்வாணம். பூதங்களிலேயே ரொம்ப வீர்யத்துடன் இருப்பது அக்னி. அக்னியின் சின்னப்பொறி மேலே பட்டால்கூடத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அந்தச் சின்னப் பொறியே பெரிய ஜ்வாலையாகி ஊரையெல்லாம் கொளுத்திவிட முடியும். காற்று, ஜலம் முதலான எந்த பூதத்துக்கும் இத்தனை வீர்யம் இல்லை. ஆனாலும் இப்படியிருக்கும் அக்னியைத்தான் அடியோடு ரூப மில்லாமல் அழிக்க முடிகிறது. காற்றை அழிக்க முடியுமா?

ஜீவாத்ம பாவம் என்று ஒன்று கண், காது, மூக்கு முதலான அனேக அவயவங்களைக் கொண்ட சரீரத்தின் நூறு லக்ஷம் அனுபவங்களைப் பெற்றுக் கொண்டு ரொம்பவும் ஸ்ட்ராங்காக இருக்கிறது. மனஸு, சித்தம், புத்தி, அஹங்காரம் என்ற நாலைக் கொண்ட அந்தஃகரணம் என்பதால் ஒவ்வொருவருக்கும் தனித்தனியாகத்தான் ஒரு ஜீவன் என்ற பாவம் ஏற்பட்டிருக்கிறது. இந்த நாலையும் கொஞ்சங்கூட அடக்கிக் கட்டுப்படுத்த முடியவில்லை. அந்தஃகரணத்தின் ஆசைகளை சரீர அவயங்களின் மூலம் அனுபவித்துக் கொண்டே போவதாக இருக்கிறது. 'சரீரமே நான்' என்று நினைப்பதான ஜீவாத்ம பாவம் ஆணிவேர் விட்டுக்கொண்டு ஆழமாக ஏற்பட்டுவிடுகிறது. ரொம்ப வீர்யத்துடன், அக்னியைப்போல, வறுத்தெடுப்பதாக அது இருக்கிறது. அப்படிப் பட்ட அதை அடியோடு அழித்துவிடுவதும் அக்னியை அணைப்பது போலத்தான் என்பதாலேயே இதற்கும் 'நிர்வாணம்' என்று பேர்

கொடுத்தார்கள். கொஞ்சங் கொஞ்சமாக ஸாதனா மார்க்கத்தில் முன்னேறித்தான் அந்த நிலையை அடைய முடியுமானாலும் கடைசிப் படியில் ஈச்வரானுக்ரஹம் என்பது ஒரு புயல் காற்று அடித்து தீபத்தை க்ஷணத்தில் அணைப்பது போலத்தான் ஒரே வீச்சில் ஜீவாத்ம பாவத்தை அழிக்கும். அதனால் 'நிர்வாணம்' என்று பெயர்கொடுப்பது ரொம்பவும் பொருத்தமாகிறது.

'நிர்வாணம்' என்று புத்தர்தான் முதலில் சொன்னாரென்று ஒரு தப்பபிப்ராயம் இருக்கிறது. அவருக்கு முந்தியே 'லிபரேஷ'னை (ஆத்மாவின் முடிவான விடுதலை நிலையை) நம் சாஸ்த்ரங்களில் அப்படி ('நிர்வாணம்' என்று) சொல்லியிருக்கிறது. கீதையில் பகவான், ஸ்தித ப்ரஜ்ஞனை (ஞான நிலையிலேயே ஊன்றியவனை) வர்ணித்து முடிக்கிறபோது 'ப்ரஹ்ம-நிர்வாணம்-ருச்சதி' (ப்ரம்ம நிர்வாணத்தை அடைகிறான்) என்றே சொல்லியிருக்கிறார்.★ அப்புறம், 'தனக்குள்ளேயே அடங்கி ஸுகித்துக் களித்துக் கொண்டு உள்ளொளியிலேயே முழுகிப்போன யோகி உயிர் வாழும் போதே ப்ரம்மமாயிருந்து ப்ரம்ம நிர்வாணம் அடைகிறான்' என்று 'ஸன்னியாஸ யோகம்' என்ற அத்யாயத்தில் சொல்கிறார்.

யோ (அ)ந்த: ஸுகோ (அ)ந்தராராம-ஸ்ததாந்தர்-ஜ்யோதிரேவ ய: ।
ஸ யோகீ ப்ரஹ்ம-நிர்வாணம் ப்ரஹ்மபூதோ (அ)திகச்சதி ॥ ●

வித்யாஸம் என்னவென்றால் புத்தர் 'நிர்வாணம்' என்று மட்டும் சொல்லியிருக்க பகவான் 'ப்ரஹ்ம நிர்வாணம்' என்கிறார். முக்யமான வித்யாஸம். புத்தர் 'நிர்வாணம்' என்று மாத்திரம் சொல்வதால் ஜீவாத்ம பாவம் அடிபட்டு, அழிவுபட்டு, ஒரே சூன்யமாய் விடுவதை மட்டுமே குறிப்பிடுகிறார். இப்படி ஜீவாத்மா அழிந்துபோய் ஒரே சூன்யமாகிவிடாமல், ஜீவாத்ம பாவம் அழிந்தாலும் பரமாத்மாவான ப்ரம்மமாகவே ஆகிவிடுகிறான் என்ற பரிபூர்ண நிலையைக் குறிக்கத்தான் பகவான் 'ப்ரஹ்ம நிர்வாணம்', 'ப்ரஹ்ம நிர்வாணம்' என்று ஒவ்வொரு தடவையும் சொல்கிறார்.)

சுகர் ஸன்னியாஸி என்பவனுக்கு ஏற்பட்ட காவி வஸ்த்ரமும் போட்டுக் கொள்ளாமல் திகம்பரராக இருந்தவர் என்று சொல்லிக் கொண்டிருந்தேன்.

விசேஷம் என்னவென்றால், அவர் தம்மளவில் ஸ்த்ரீ-புருஷ பேதம் தெரியாத பரிசுத்த நிலையில் நிர்வஸ்திரமாயிருந்தது மட்டுமில்லை. இந்தப் பேத உணர்ச்சி நிறையவுள்ள இதர ஜனங்களுங்கூட அவருடைய ஸான்னித்ய விசேஷத்தினால் தாங்களும் அந்தத் தோஷம் இல்லாதவர்களாகிவிடுவார்கள்.

ஒரு கதை உண்டு. அவர் பூணூல் போடுவதற்கு முந்தியே பரிவ்ராஜராக ஓடினார், பின்னாலேயே வ்யாஸர், 'புத்ரா, புத்ரா!' என்று ஓடி

---

★ II. 72

● V.24 இதற்கடுத்த 25-வது, 26-வது ச்லோகங்களிலும் 'ப்ரத்த நிர்வாணம்' என்ற சொற்றொடர் வருகிறது.

னார் – என்று சொன்னேனல்லவா? பால்யத்திலேயே அப்படி அவர் (சுகர்) ஓடியிருக்கக்கூடும் என்று நான் சொன்னாலும், இந்தக் கதைப்படி அவர் நல்ல யௌவன ப்ராயம் வந்த பின்தான் அப்படிப் போனது... வ்யாஸர் தனக்கு ஒரு ஸத்புத்ரன் வாய்க்க வேண்டுமென்ற தாபத்தோடு, பிரார்த்தனையோடு யாகாக்னிக்காக அரணிக் கட்டையைக் கடைந்து கொண்டிருந்தார்; அந்த அக்னியிலேயே சுகர் ஜ்யோதி ஸ்வரூபமாக உத்பவித்தார்; உத்பவிக்கும்போதே யுவாவாக இருந்தார் – என்றும் அபிப்ராயமுண்டு. ஆக, கட்டிளம்காளை உருவத்தில் அவர் பாட்டுக்கு வஸ்த்ரமில்லாமல் போய்க் கொண்டிருந்தார்.

வழியில் ஓர் இடத்தில் ஸ்த்ரீகள் ஸ்நானம் பண்ணிக் கொண்டிருந் தார்கள். அவர்களுக்கு நடுவில் சுகர் நிர்வஸ்திரமாக வருகிறார். அவர் களும் அந்த மாதிரியே இருக்கிறார்கள். ஆனால் அவர் அப்படி இருப்ப தும் ஸரி, இரண்டுமே அந்தப் பெண்டுகளுக்குக் கொஞ்சங்கூட விகல்ப மாகத் தெரியவில்லையாம்! லஜ்ஜையே உண்டாகவில்லையாம்!

சுகர் மேலே போய்விட்டார்.

ஒரு நிமிஷம் கழித்து வ்யாஸாசார்யாளும் அந்த வழியிலேயே ஓடி வந்தார். இவர் நல்ல வ்ருத்தர். மரவுரி, மான்தோல் எல்லாம் போட்டுக் கொண்டு உடம்பை நன்றாக மூடிக் கொண்டிருப்பவர்.

இவரைப் பார்த்தவுடன் அந்த ஸ்த்ரீகளுக்கு ரொம்பவும் வெட்க மேற்பட்டு, துணிகளை வாரிப்போட்டுக் கொண்டார்களாம்!

'அதென்ன? என் குமாரன், காளைப் பருவத்துக்காரன் போனபோது நீங்கள் பாட்டுக்கு ஸ்நானம் பண்ணிக் கொண்டிருந்தீர்கள்! நான், கிழவன், வருகிறபோது வெட்கம் தாங்கமுடியாமல் அவதிப்படுகிறீர் கள்?' என்று வ்யாஸர் கேட்டாராம்.

'வயஸு என்னவாயிருந்தாலென்ன? அவருடைய நிர்மலம்தான் எங்களையும் தொட்டுடுத்து. அவர் ஸன்னிதியிலே எங்களுக்கும் பேத உணர்ச்சி தெரியலை' என்று அவர்கள் பதில் சொன்னார்களாம்!

சுகர் மாதிரியானவர்களுக்கு வ்யவஸ்தை, விதிகள், ரூல்கள் எதுவு மில்லை.

நாலு ஆச்ரமங்களில் முடிவானது ஸன்னியாஸம். அதனால் அதற் கும் ரூல்கள் உண்டு; இப்படித்தான் பண்ணணும், இப்படிப் பண்ணப் படாது என்று அனேகம் உண்டு. ஒரு ரூலுக்கும் உட்படாத ப்ரம்ம ஸ்வ ரூபமாகவே இருந்தவர் சுகர். அதனால் ஸன்னியாஸாச்ரமத்துக்கும் மேலே போய் விட்டவர். இப்படி நாலு ஆச்ரமங்களுக்கு மேலே போய் விட்டவர்களுக்கு ஜாதி ஆசாரங்களாகிய ரூல்களும் கிடையாததலால், ஆச்ரமங்கள், வர்ணங்கள் ஆகியவற்றைக் கடந்துவிட்ட அவர்களை 'அதிவர்ணாச்ரமிகள்' என்று சொல்வார்கள். அத்யாச்ரமிகள் என்றும் சொல்வதுண்டு. ஆச்ரமத்தைக் கடந்தவர் என்றாலே வர்ணத்தையும் கடந்தவராகத்தான் இருக்க வேண்டும். அதனால் இப்படி (அதிவர்ணாச் ரமி என்பதற்குப் பதில் அத்யாச்ரமி என்று) சொன்னாலே போதும்.

குரு பரம்பரையில் தக்ஷிணாமூர்த்திக்கு அடுத்ததாக மஹாவிஷ்ணு

வுக்கு முன்பாக, தத்தாத்ரேயரைச் சொல்லும் வழக்கம் உண்டு அமூர்த்தி யான பரப்ரஹ்மமாக இருக்கப்பட்ட தக்ஷிணாமூர்த்தி, அப்புறம் த்ரி மூர்த்தி ஸ்வரூபமான தத்த(ாத்ரேய)ர், அதற்கப்புறம் த்ரிமூர்த்திகளில் வரும் மஹாவிஷ்ணு, ப்ரம்மா என்று குரு பரம்பரை போகிறது. த்ரி மூர்த்திகளில் விட்டுப் போன சிவனும் தக்ஷிணாமூர்த்தியில் வந்துவிடு கிறார். அப்புறம் இந்தப் பரம்பரைக்கு நடுநாயகமாக, ஒரு ஹாரத்தின் நடுவிலுள்ள ரத்னப் பதக்கம் மாதிரியாக உள்ள ஸ்ரீ சங்கர பகவத் பாதாளும் சிவன்தான்...

(நான்) சொல்லவந்தது, சுகரைப்போல அதிவர்ணாச்ரமியாகக் குரு பரம்பரையில் வருகிற இன்னொருவர் தத்தர் என்பது. மும்மூர்த்தியும் சேர்ந்தவர் என்றாலும் அவர் தக்ஷிணாமூர்த்தி, மஹாவிஷ்ணு, ப்ரம்மா ஆகியவர்கள் தெய்வங்களாகவே இருப்பது போல இல்லாமல் பூலோ கத்தில் அவதூத ஸன்னியாஸியாகத் திரிந்து கொண்டிருந்தவர். 'ஸன்னி யாஸி' என்றால் அஸல் ஸன்னியாஸாச்ரமி அல்ல, அந்த மாதிரி, உடை மைகளையெல்லாம் உதறிவிட்டு ஸதாவும் ஸஞ்சாரம் செய்துகொண் டிருந்தவர். வாஸ்தவத்தில் அவரும் ஸன்னியாஸிக்குரிய முண்டனம், காஷாயம் இல்லாமல் அதிவர்ணாச்ரமியாக ஜடையுடன், திகம்பரராக இருந்தவர்தான்!

உள்ளுக்குள்ளே ஸதாவும் ப்ரம்மானுபவத்திலேயே இருக்கும் அதி வர்ணாச்ரமி வெளியில் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். உடை மைகளை ஆண்டு கொண்டு ராஜாவாகக்கூட இருக்கலாம். ஒரே இடத் தில் ஜன்மாபூரா வஸிக்கலாம், எதுவும் பண்ணலாம். ஆனாலும் தத்தரும் சுகரும் அப்படி இல்லாமல் ஸன்னியாஸிகளைப் போல எல்லா உடைமைகளையும் விட்டவர்கள்; ஒரே இடத்திலில்லாமல் ஸஞ்சாரம் செய்து கொண்டேயிருந்தவர்கள். 'யம் ப்ரவ்ரஜந்தம்' என்று ச்லோகத் தில் ஆரம்பித்தபடி ஸன்னியாஸிகளுக்கே உரிய பரிவ்ராஜகவ்ருத்தியை (ஓரிடத்தில் தங்காமல் இடம் பெயர்ந்துகொண்டே இருப்பதான வாழ்க்கை முறையை) சுகர் மேற்கொண்டிருந்தார். தத்தாத்ரேயரும் அப்படித்தான்.

ஞானாசார்யர்களாக நமஸ்கரிக்கத் தக்கவர்களில் ஸனகர், ஸனந்த னர், ஸனாதனர், ஸனத்குமாரர் என்று ஸஹோதரர்களாக நாலு பேர். அந்த நாலு பேரையும் ஒன்று சேர்த்து பகவானின் (விஷ்ணுவின்) 24 அவதாரங்களில் ஒன்றான குமாராவதாரம் என்பார்கள். 'குமாரர்' என்று சொன்னதற்கு ஒரு காரணம் நாலுபேரில் கடைசியானவரின் பேர் ஸனத் 'குமாரர்' என்றிருப்பது. இன்னொரு காரணம் இந்த நால் வர்தான் ஸுப்ரஜைகளாக ப்ரஹ்மாவுக்கு முதன்முதலில் தோன்றிய புத்ரர்கள் – அதாவது ப்ரம்ம 'குமாரர்கள்' – என்பது. எண்ணிய மாத் ரத்தில் மானஸ புத்ரர்களாக இவர்களை ப்ரம்மா ஸ்ருஷ்டித்துவிட்டார். (குமார அவதாரம் என்று சொல்வதற்கு) மூன்றாவது காரணம் இவர் கள் அன்றுபோல் என்றும் குமாரர்களாகவே இருப்பது. தக்ஷிணா மூர்த்தியும் சுகரும் என்றும் யுவாவாக இருப்பவர்கள். மார்க்கண்டேய ரையும் 'என்றும் பதினாறு' என்கிறோம். ஸனகாதி நால்வரோ

யௌவனம் என்கிறவரைகூடப் போகாமல் என்றும் அஞ்சு வயஸு பாலர்களாகவே, குமாரர்களாகவே இருப்பவர்கள். மஹாஞானிகளாக, சுகர் மாதிரியே ஸ்த்ரீ-புருஷ பேதம் தெரியாதவர்களாக, பிறந்த வுடனேயே நிவ்ருத்தி மார்க்கத்திற்குப் போய் ப்ரஹ்ம ஞானிகளாகி விட்டவர்கள். மற்றவர்களுக்கும் ஞானம் அருளியவர்கள். இவர்களும் சாஸ்த்ரோக்தமாகச் சொல்லப்படும் ஸன்னியாஸாச்ரமம் வஹித்தவர் களல்ல. மொட்டைத் தலையும், காஷாயமும் இல்லாதவர்கள். சுகரை யும், தத்தரையும் போலத்தான் இவர்களும் நிர்வஸ்த்ரமாக ஸஞ்சாரம் பண்ணிக் கொண்டேயிருப்பார்கள். குழந்தைகளாக இருப்பதால் அதில் பாமரர்களுக்கும்கூட விகல்பம் தெரியாது. இவர்களையும் அதிவர் ணாச்ரமிகளில்தான் சேர்க்க வேண்டும்...

மொத்தத்தில் விஷயமென்னவென்றால் குரு பரம்பரையில் சுகர் வரையில், சுகர் உள்பட எவருமே ஸ்ம்ருதிகளில் சொல்லியிருக்கும்படி யான ரூல்களுக்கு உட்பட்ட ஸன்னியாஸ ஆச்ரமம் வஹித்தவர்கள் அல்லர். ஆனாலும் ப்ரஹ்மஞான ஸ்வரூபங்களாக இருந்ததால் ப்ரம்ம வித்யைக்கு ஆசார்ய புருஷர்களாக இருந்தார்கள்.

கலியில் க்ருஹஸ்தாச்ரமத்திலிருந்து கொண்டு ஞானோபதேசம் செய்வது ஸரி வராது என்று பார்த்தோம். அப்படியேதான் அதிவர் ணாச்ரமமும். அதிவர்ணாச்ரமிக்கு இருக்க வேண்டிய ஸ்திரமான ப்ரம் மானுபவத்தைப் பற்றிக் கொஞ்சங்கூடக் கவலைப்படாமல், அவனுக்கு ஆசாரங்கள் எதுவும் வேண்டியதில்லை என்றிருப்பதை மட்டும் எடுத் துக் கொண்டு, மனம் போனபடிச் செய்கிற வேஷதாரிகள் தங்களை அதிவர்ணாச்ரமிகளாகச் சொல்லிக் கொண்டு புறப்படக்கூடிய யுகம் இது. தற்காலத்தில் மனஸுக்கு வேதனை தருவதாக இப்படி அங்கங்கே கேள்விப்படுகிறோம். அதனால் அதிவர்ணாச்ரமி என்றால் அவ நம்பிக்கை, அவமரியாதை, பரிஹாஸம் எல்லாமும் தோன்ற இடம் கொடுத்திருக்கிறது. எனவே கலியில் அதிவர்ணாச்ரமிகள் குரு பரம் பரையில் வருவதற்கில்லை என்றுதான் சுகாசார்யாளுக்கு அப்புறம் விதிவத்தாக ஸன்னியாஸாச்ரமம் வாங்கிக் கொண்டவர்களின் பரம் பரை கௌடபாதரிலிருந்து தொடங்கியது.

இப்படிச் சொன்னதால் 'ரூல்'படியான ஸன்னியாஸாச்ரமம் என்பதே கௌடபாதரிலிருந்துதான் ஆரம்பித்ததாக்கும் என்று நினைத்து விடக்கூடாது. அது கௌடபாதருக்கு முன்பே ஆதியிலிருந்து இருந்தது தான். நான்கு ஆச்ரமங்கள் என்பது ஆதியான வேத காலத்திலிருந்தே இருப்பது. வேதத்தில் ஸம்ஹிதை – ப்ராஹ்மணம் – ஆரண்யகம் – உபநிஷத் என்று நாலு இருப்பதே வரிசை க்ரமமாக ப்ரஹ்மசாரியின் அத்யயனம் – க்ருஹஸ்தனின் யஜ்ஞானுஷ்டானம் – அரண்யத்தில் போய் இருந்துகொண்டு தத்வ விசாரத்தோடு வானப்ரஸ்தன் செய்யும் கர்மானுஷ்டானம் – கர்மாவை விட்டுவிட்டு ஸன்னியாஸி செய்கிற சுத்தமான தத்வ விசாரம் என்ற நாலைக் காட்டுவதுதான். (இப்படி வேத முறையை நன்றாகப் புரிந்துகொண்டு சொல்லியிருப்பது யாரென் றால் பால் டாய்ஸன் (Paul Deussen) என்கிற ஜெர்மனிக்காரர்! அவருக்கு

நம் ஆசார்யாளின் ஸித்தாந்தத்தில் எல்லையில்லாத ஈடுபாடு!) ப்ருஹதாரண்ய உபநிஷத்தில் யாஜ்ஞவல்கியர் பத்னிகளை விட்டுவிட்டு ஸன்னியாஸியாகப் புறப்பட்டதைப் பார்க்கிறோம். 'நாரத பரிவ்ராஜக உபநிஷத்' என்பது போல, ஸன்னியாஸத்திலே எத்தனை வகை உண்டு என்று விவரித்துச் சொல்வதற்காகவே பத்துப் பதினைந்து உபநிஷத்துகள் இருக்கின்றன – 'அவதூதோபநிஷத்', 'ஸன்னியாஸோபநிஷத்' என்றெல்லாம் இருக்கின்றன. முதல் மனுஷ்யனைப் பிறப்பித்தவர் மனு. அவரே எப்படி வாழ்க்கை நடத்த வேண்டுமென்று அவனுக்குச் சொல்லிக் கொடுப்பதற்காக மனு ஸ்ம்ருதி என்றும் மனு தர்ம சாஸ்த்ரம் என்றும் சொல்லப்படும் நூலைப் பண்ணினார். அதிலும் அப்புறம் வந்த மற்ற ஸ்ம்ருதிகளிலும் நான்கு ஆச்ரமங்களைச் சொல்லித் துரீயாச்ரமமாக (நான்காவது ஆச்ரமமாக) ஸன்னியாஸத்தை விதித்திருக்கிறது. துரீயாச்ரமத்திலிருந்துதான் துரீய பதம் (விழிப்பு, கனவு, உறக்கம் மூன்றும் கடந்த நான்காவதான ஸமாதி நிலை) பெறவேண்டுமென்று ஸம்ருதிகள் (தர்ம சாஸ்த்ரங்கள்) விதித்திருக்கின்றன. பல தர்ம சாஸ்த்ரங்களைப் பார்த்து, அவற்றில் சொல்லியுள்ள விஷயங்களைத் தொகுத்துக் கொடுப்பதாக 'நிபந்தன க்ரந்தங்கள்' என்று இருக்கின்றன. அவற்றில் ஸன்னியாஸ தர்மங்களை விரிவாகச் சொல்வதாக விச்வேச்வர ஸ்ம்ருதி என்பது இருக்கிறது. விச்வேச்வர ஸம்ஹிதை என்றும் சொல்வது. ஆனபடியால் ஜீவ ஸ்ருஷ்டி ஏற்பட்ட நாளாகவே விதிவத்தான ஸன்னியாஸிகள் உண்டு. அத்வைத ஸம்ப்ரதாயத்தையே முற்றிலும் தழுவியவர்களாகவோ, ஓரளவு தழுவியவர்களாகவோ ஸன்னியாஸியாகவும் அத்யாச்ரமியாகவும் இருந்த பூர்விகர்கள் சிலரைப் பற்றி ஆசார்யாளே பாஷ்யத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

ஆனாலும் ஆசார்யாளின் குரு பரம்பரையில் (அவருக்கப்புறம் அவருடைய சிஷ்ய பரம்பரையில் வந்துள்ள நம் எல்லோருக்குமே அது தான் குரு பரம்பரையாகிவிட்டது; குருவான கோவிந்த பகவத்பாதரும் தான் விதிவத்தாக ஸன்னியாஸம் வாங்கிக்கொண்டு சாஸ்த்ர ப்ரகாரம் அந்த ஆச்ரமத்தின் ஆசரணைகளை நடத்தியவர்கள்.

ஸனகாதியர், தத்தர், சுகர் முதலியவர்கள் ஸன்னியாஸத்திற்கும் மேலே போன மஹா பெரியவர்களாதலால், ஸன்னியாஸ தீக்ஷை கொடுக்கும் அதிகாரம் அவர்களுக்கும் உண்டு. அப்படித்தான் சுகரிடமிருந்து கௌடர் ஸன்னியாஸம் வாங்கிக் கொண்டது...

குடீசகர், பஹூதகர், ஹம்ஸர், பரமஹம்ஸர் என்று நாலு வகையாகக் கூறப்படும் ஸன்னியாஸிகளில் அத்வைத ஸன்னியாஸிகள் நாலாவதான உத்தமப் பிரிவைச் சேர்ந்தவர்கள். அதாவது 'பரம ஹம்ஸர்கள்'. ஓரிடத்திலேயும் ஸ்திரவாஸம் செய்யாமல் ஸஞ்சரித்துக்கொண்டே இருப்பதால் அவர்களைப் 'பரமஹம்ஸ பரிவ்ராஜகர்கள்' என்று சொல்வது வழக்கம்.

ஆசார்யாளைக்கூட அப்படித்தான் சொல்வது. அவருடைய மடங்களில் வருகிற ஸ்வாமிகளையும்தான். 'மடம்' என்ற ஸ்தாபனத்திலிருந்து கொண்டு லோகத்திற்கு தர்மங்களை எடுத்துச் சொல்லும் குருக்களாக

இருப்பதால், குரு பீடம் என்பதிலிருந்துகொண்டு 'ஆபீஸ்' பண்ணும் ஸன்னியாஸிகளாக இருப்பதால் — அதாவது லோகப் பொறுப்பு என்பதே இல்லாத ஸன்னியாஸியாயில்லாமல் லோகத்தில் தர்மம் வளர்வதற்குப் பாடுபடும் பொறுப்பைப் பெற்றிருப்பதால் — இங்கே பரம ஹம்ஸ பரிவ்ராஜகர்களுக்கான விதிமுறைகளில் சில மாறுதல்கள் பண்ணியிருக்கிறது. ஸன்னியாஸ உபநிஷத்துகளிலும், ஸம்ருதிகளிலும், மற்ற பழைய புஸ்தகங்களிலும் சொல்லியிருப்பதற்குக் கொஞ்சம் வித்யாஸமாக நாம் ஆசார்யாளிடம் பார்க்கிறோம், அவருடைய மடங்களைச் சேர்ந்த ஸ்வாமிகளிடம் பார்க்கிறோமென்றால் அதற்குக் காரணம், இவர்கள் ஒரு பொறுப்பும் இல்லை என்று விட்டவர்களாக இல்லாமல், லோகத்தில் தர்மாபிவிருத்திக்குப் பொறுப்புப் பெற்றவர்களாக இருப்பதுதான்.

இந்த விஷயம் இருக்கட்டும். நான் சொல்ல வந்தது பரமஹம்ஸ ஸன்னியாஸிகளையும் அத்யாச்ரமிகளையும் பற்றியது. ஸன்னியாஸத்தையும் கடந்தவரே அத்யாச்ரமி என்றாலும் பழைய சாஸ்த்ரங்கள் சிலதில் பரமஹம்ஸர்களையே நாம் அத்யாச்ரமி என்று சொல்கிறவரைப் போலத்தான் வர்ணித்திருக்கிறது. அவற்றில் பரமஹம்ஸ ஸன்னியாஸிகளையே வஸ்த்ரம், தண்ட-கமண்டலம் ஆகியவற்றையும் விட்டுவிட்டவராகச் சொல்லி, சுகர், தத்தர் முதலியவர்களையும் இந்தக் கோஷ்டியிலேயே சேர்த்திருக்கிறது.

பரமஹம்ஸ ஸன்னியாஸிக்கு அப்புறம் துரீயாதீதர், அவதூதர் என்று இரண்டு பிரிவுகளைச் சொல்லி இவர்களை அத்யாச்ரமிகள் என்று குறிப்பாக வேறுபடுத்திக் காட்டும் வழக்கம் வந்தபிறகும்கூட அத்யாச்ரமிகளைப் 'பரமஹம்ஸ பரிவராஜகர்கள்' என்று சொல்வது நீடித்து வந்திருக்கிறது. ஆசார்யாளே 'சாந்தோக்ய பாஷ்ய'த்தில் ஓர் இடத்தில்★ 'பரமஹம்ஸ பரிவ்ராஜகை: அத்யாச்ரமிபி:' என்று சொல்லியிருக்கிறார். ('பரமஹம்ஸ பரிவ்ராஜகர்களான அத்யாச்ரமிகளால்' என்று அர்த்தம்.)

அதாவது, யதி தர்மங்கள் என்னும் ரூல்கள் உள்ள நாலாவது ஆச்ரமியே ஸன்னியாஸி, இந்த ரூல்களும் நழுவிப் போய் நாலாவது ஆச்ரமத்திற்கும் மேலே போனவனே அத்யாச்ரமி என்று வித்தியாஸம் பார்க்காமல் இரண்டு பேரையும் ஒன்றாகிக் குறிப்பிடும் வழக்கம் வெகு காலமாக இருந்து வந்திருக்கிறது. ஸம்ஸார ஆசையையும் இஹ லக்ஷ்யத்தையும் விட்டுவிட்டு ஒருத்தன் கிளம்பிவிட்டானென்ற பிறகு, அப்படிக் கிளம்பின எல்லாரையும் ஒன்றாகவே சொல்லிவிடலாமென்று ஏற்பட்டிருக்கிறது.

விவிதிஷா ஸன்னியாஸம், வித்வத் ஸன்னியாஸம் என்ற இரண்டைச் சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறது. யதி தர்ம ரூல்களுக்குக் கட்டுப்பட்டுத் துரீயாச்ரமம் என்று ஆரம்பிப்பவனே, அந்த ஆச்ரமத்தில் முன்

---

★ VIII-12-1. பாஷ்யம் முடியுமிடம்.

னேறி முன்னேறி ரூலையும் விட்டு அத்யாச்ரமியாக ஆவதை இந்தப் பாகுபாடு தெளிவு செய்து காட்டுகிறது. 'விவிதிஷா' என்றால் ஒன்றை அறிய ஆசைப்படுவது, மனஸாறத் தாபப்படுவது. ஸமாதி நிலை, ஆத்ம ஸாக்ஷாத்காரம், பரஹ்மானந்தம் என்றெல்லாம் சொல்லப்படுவது என்னவென்று அறிய ஒருவர் ஆசைப்படுகிறார், தாபப்படுகிறார். இப்படியொரு 'விவிதிஷா' அவருக்கு இருக்கிறது. குடும்ப வாழ்க்கையில் உள்ள மட்டும் மேலே சொன்ன லக்ஷ்யத்துக்கே டெடிகேட் பண்ணிக் கொண்டு ப்ரயாஸைப்பட முடியாது என்று அவர் feel பண்ணுகிறார். அதனால் க்ரமமாக சாஸ்த்ரங்களில் சொல்லியுள்ளபடி ஸன்னியாஸம் வாங்கிக்கொண்டு தண்ட, கமண்டல காஷாய தாரணம், மற்ற யதி தர்ம ரூல்கள் ஆகிய எல்லாவற்றையும் பின்பற்றுகிறார். இது தான் விவிதிஷா ஸன்னியாஸம்.

இப்படி ஸன்னியாஸியாகி ஆத்ம சாஸ்த்ரங்களைப் படித்து விசாரம் பண்ணிக் கொண்டு முன்னேறும்போது ஸமாதி நிலை பற்றிச் சொல்லியிருப்பதெல்லாம் நிஜமானவைதான் என்ற நிச்சயம் அவருக்கு ஏற்படுகிறது. கொஞ்சம் கொஞ்சம் அந்த அனுபவம் வந்து தொட்டுவிட்டுப் போகிறது. தொடும், ஆனால், போயும் விடும்! கரையோரத்தில் ஸமுத்ர அலை கொஞ்சம் காலைத் தொட்டுவிட்டுப் போய்விடுகிற மாதிரிதான்! ஸமுத்ரத்தில் அப்படியே முழுகி நனையவில்லை!

கேள்வியறிவில் பிறந்த ஆசையானது இப்படிக் கொஞ்சமாவது அனுபவ அறிவாகவே ஆகும்போது விவிதிஷா போய் 'வித்வத்' உண்டாகிறது.

ருசி கண்டுவிட்டதால் அப்படியே அந்த ரஸத்திலேயே முழுக்க முழுகிப் போகவேண்டுமென்று அவருக்குத் தோன்றுகிறது. அச்சமயத்தில் யதி தர்ம ரூல்படிப் பார்த்துப் பார்த்துப் பண்ணிக் கொண்டிருப்பதுகூட நிதித்யாஸனம் என்பதான தீவிர ஆத்ம விசாரத்துக்கு இடைஞ்சல் பண்ணுவதாக நினைக்கிறார். அதனால் தண்ட, கமண்டல, காஷாயாதிகளையும், மற்ற யதி தர்ம ரூல்களையும் விட்டுவிடுகிறார். அது தான் 'வித்வத் ஸன்னியாஸம்' என்பது.

ஸாக்ஷாத்காரம் என்னவென்று அறியாத நிலையில் அறிய ஆசைப்பட்டு மேற்கொள்வது விவிதிஷா ஸன்னியாஸம். அதன் 'டேஸ்ட்'டைக் கொஞ்சம் அறிய ஆரம்பித்தபின் பூர்ணமாக அறிந்து அதையே சாச்வதமாக்கிக் கொள்வதற்காக 'ரூல்களைக் கொண்ட ஸன்னியாஸ'த்தையும் விட்டுவிட்டு அத்யாச்ரமத்திற்குப் போவது வித்வத் ஸன்னியாஸம்.

ஸன்னியாஸத்துக்கு ஸன்னியாஸம்' என்று வேடிக்கையாகச் சொல்வதுண்டு. பக்குவமாகாத ஒருத்தன் ஏதோ கொஞ்சம் விரக்தி மாதிரித் தோன்றியதில் வீட்டைவிட்டுப் புறப்படுகிறான். 'விட்டு விடுவது'தான் ஸன்னியாஸம். அப்படி ஸன்னியாஸியாகிறான். அப்புறம் விரக்தி போன இடம் தெரியவில்லை! பழைய ஆசைகளெல்லாம் திரும்புகின்றன. 'போதும் ஸன்னியாஸம்' என்று ஸன்னியாஸத்தை விட்டுவிட்டு அகத்துக்கே திரும்பிவிடுகிறான் இதுதான் 'ஸன்னியாஸத்துக்கு ஸன்னியாஸம்!'

அமாவாஸைத் தர்ப்பணம் பண்ணுவதை ஒருத்தன் நிறுத்திவிட்டால் 'தர்ப்பணத்துக்குத் தர்ப்பணம் பண்ணிவிட்டான்' என்று சொல்வதுண்டு! அப்படி, ஸன்னியாஸத்துக்கு ஸன்னியாஸம்!

ஆனால் ஒரு அத்யாச்ரமி ஸன்னியாஸ தர்மத்தை விடும்போது அவர் ஸம்ஸாரத்துக்குத் திரும்புவதற்காக அப்படிப் பண்ணவில்லை. யதி தர்மத்தை விடுவது அவருக்கு முக்யமில்லை. நோக்கமில்லை. ஸமாதி நிலையில் சேர்ந்திருப்பதுதான் அவருடைய நோக்கம். ஸன்னியாஸ ஆசரணையை அவர் விடுவது அதன் லக்ஷ்யமான அனுபவத்தில் சேர்வதற்கே. ஸன்னியாஸத்திலிருந்து கீழே வராமல், அதற்கு மேலே போவதற்காக விடுகிறார். அதனால்தான் 'அதி' – ஆச்ரமி என்பது.

இப்படிச் சொன்னதால் அனுபூதி வாய்க்க ஆரம்பிக்கும் நிலையில் எல்லா ஸன்னியாஸிகளுமே துரீயாச்ரமத்திலிருந்து அத்யாச்ரமத்துக்குப் போகத்தான் செய்வார்கள், அப்படித்தான் செய்யணும் என்று இல்லை. க்ருஹஸ்தாச்ரமியாகவே இருந்து கொண்டும்கூட ஜனகர் ஜீவன்முக்தராக இருந்திருக்கிறார். ஸமர்த்த ராமதாஸ் ஸ்வாமிகள் ப்ரஹ்மசர்ய ஆச்ரமியாக இருந்துகொண்டே அத்வைதானுபூதிமானாக இருந்திருக்கிறார். இப்படி இந்த (இரண்டு) ஆச்ரமங்களில் ரொம்ப அபூர்வமாகச் சிலர் இருந்திருக்கிறார்களென்றால், விதிவத்தான, ரூல்களைக் கொண்டதான ஸன்னியாஸாச்ரமத்தில் இருந்துகொண்டோ, ஏராளமான மஹான்கள் ஜீவன் முக்தர்களாக இருந்திருக்கிறார்கள். 'டாண்' என்று ஒரே flash-ல் ஒரு ஸன்னியாஸிக்கு ஸாக்ஷாத்காரம் சாச்வதமாகக் கூடும்போது, அதற்கப்புறம் அதை எதுவும் கலைக்க முடியாதென்பதால், மூச்சு விடுகிற மாதிரி **involuntary**யாகவே (அனிச்சையாகவே) ஆச்ரம விதிகளை அவரால் விடாமல் அனுஸரித்து வர முடியும். இப்படிப் பலபேர் உண்டு. ஒரே வீச்சில் இல்லாமல், ஸமாதி கூடுவதும் கலைவதுமாக இருந்து, போகப் போக ஸ்திரப்பட்டவர்களிலேயும்கூடப் பலர் ரூல்களை விடாமல் அவற்றின்படியே பண்ணிக் கொண்டு போனவர்கள்தான். இதெல்லாம் பேச்சினால் புரியவைக்கும் விஷயமில்லை. அவரவர் அனுபவத்தையும், ஈச்வரன் அவர்களைக் கொண்டு லோகத்துக்கு என்ன மாதிரி உதாரணம் காட்ட நினைக்கிறான் என்பதையும் பொறுத்தே ஒரு மஹான் அத்யாச்ரமியாகவோ, தேஹம் விழுகிறவரை விதிவத்தான ஸன்னியாஸாச்ரமியாகவோ இருப்பது அமையும்.

எந்த விதி – நிஷேதமும் தேவைப்படாதவனாகவும் ஸகல விதி – நிஷேதங்களையும் முறித்துப் போட்டு உயரே போனவனாகவும் பரிபூர்ண ஸ்வதந்த்ரனாக உள்ள ஒரு ஞானியை லோகத்துக்குக் காட்ட வேண்டுமென்று ஈச்வரன் நினைக்கும்போது ஒருவரை அதிவர்ணாச்ரமியாக்கிக் காட்டுகிறான். சாஸ்த்ரக் கட்டுப்பாடு ரொம்பவும் அவச்யம் என்று ஜனங்களுக்குப் புரியவைக்க நினைக்கும்போது அவனே ஒரு ப்ரஹ்ம ஞானியை சாஸ்தர விதிகளின்படியே நடந்து காட்டும் ஸன்னியாஸியாக இருந்து காட்டப் பண்ணுகிறான்.

தத்தாத்ரேயரையும் சுகரையும் போன்ற அத்யாச்ரமிகளான குரு

மார்கள் ப்ரஹ்மவித்யா பரம்பரையில் தோன்றியிருந்தாலும், கட்டுப்பாடுகள் ஒரேடியாகக் குலைந்து கிடக்கும் இந்த யுகத்தில், எந்தக் கட்டுப்பாடும் இல்லாதவரான அத்யாச்ரமியிடமிருந்து ஜனங்கள் கட்டுப்பாடு இல்லாமலிருப்பதைத்தான் எடுத்துக் கொள்வார்கள், அவருடைய உள்ளனுபவத்தை எடுத்துக் கொள்ள மாட்டார்கள் என்பதால்தான் கௌடரிலிருந்து ஆச்ரமக் கட்டுப்பாடுள்ளதான ஸன்னியாஸத்தைத் தழுவியவர்களாகவே நம்முடைய குரு பரம்பரை அமைந்தது.

லோகத்திற்கு வழிகாட்ட வந்த ஆசார்யாள் சாஸ்த்ரோக்தக் கட்டுப்பாடுகளுள்ள ஸன்னியாஸாச்ரமியாகத்தான் இருக்க வேண்டும்; அது மட்டும் போதாது; அவரும், வழிகாட்டியாக மட்டும் இல்லாமல் வழியைப் பின்பற்றுபவராக, தாமும் (அத்யாச்ரமியிடமிருந்து இல்லாமல்) ஸன்னியாஸி ஒருவரிடமிருந்தே தீக்ஷை பெற வேண்டும்; இந்தச் சாஸ்த்ர மரியாதையை வலியுறுத்துவதற்காக, அவருடைய குருவுங்கூட இப்படியே ஸன்னியாஸியிடமிருந்து ஆச்ரமம் பெற்றவராகவே இருக்க வேண்டும் - என்கிற ரீதியில்தான் கௌடபாதரிலிருந்து விதி - நிஷேதங்களோடு கூடிய நான்காவது ஆச்ரமிகளாக குரு பரம்பரை அமைந்திருக்கிறது.

ஒரு விஷயம் சொல்லப்போனால் ஒன்பது விஷயம் அகப்படுகிறது! புதையலாக அகப்படுவதால் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டே போவோம்.

அத்யாச்ரமிகளைப் பரமஹம்ஸ பரிவ்ராஜகர் என்று ஆசார்யாள் சொல்வது எங்கேயென்றால்: இந்த்ரனைப் பல வருஷங்கள் திரும்பத் திரும்பச் சோதித்துப் பார்த்துவிட்டு அப்புறம் ப்ரஜாபதி அவனுக்கு ஆத்ம தத்வத்தை உபதேசித்ததாக சந்தோக்யோபநிஷத்தில் இருக்கிறது. உபதேச ஆரம்பத்தில் ஆசார்யாள் பாஷ்யம் பண்ணும்போதுதான் இந்த விஷயம் சொல்லியிருக்கிறார். 'எல்லா ஆசை அரிப்புகளையும் துறந்தவர்களாகவும், வேறு நாட்டமில்லாமல் ஆத்ம ஞானம் ஒன்றுக்கே தங்களை அர்ப்பணித்துக் கொண்டவர்களாகவும், வேதாந்த விஞ்ஞானங்களிலேயே பூர்ணமாக ஈடுபட்டவர்களாகவும், ப்ரஜாபதி நான்கு ப்ரகரணங்களாக இங்கு கூறியுள்ள ஸம்ப்ரதாயத்தை அனுஸரிப்பவர்களாகவும் உள்ள பரமபூஜ்யர்களான பரமஹம்ஸ பரிவ்ராஜகர்களாகிய அத்யாச்ரமிகளாலேயே இந்த ஆத்ம வித்யை அறியக்கூடியது. தற்காலத்திலும்கூட இப்படிப்பட்டவர்களே இந்த வித்யையை சிஷ்யர்களுக்கு உபதேசிக்கிறார்கள். இந்த யோக்யதாம்சங்கள் இல்லாத வேறு யாரும் உபதேசிப்பதில்லை' என்கிறார்★.

---

★ தஸ்மாதிதம் த்யக்த - ஸர்வ - பாஹ்யைஷணை: அநந்ய-சரணை: பரமஹம்ஸ-பரிவ்ராஜகை: அத்யாச்ரமிபி: வேதாந்த-விஜ்ஞான - பரைரேவ வேதநீயம் பூஜ்யதமை: ப்ராஜாபத்யம் சேமம் ஸம்பரதாய - மனுஸரத்பி: உபநிபத்தம் ப்ரகரண சதுஷ்டயேந I ததா அநுசாஸரி அத்பாபி த ஏவ நாந்யே I ('சாந்தோக்ய பாஷ்யம்': VIII.12.1. முடிவுப்பகுதி).

உபநிஷத்தில் நாலு ப்ரகரணங்களாக வரும் ப்ராஜாபத்ய வித்யையை உபதேசிக்கும் ஞானிகள் ஆசார்யாள் காலத்திலும் இருந்திருக்கிறார்களென்று இங்கே ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. அதாவது, அவருடைய அவதாரத்திற்கு முன்பு வேத தர்மம் அடியோடு அணைந்து விடாமல் முணுக்கு முணுக்கு என்றாவது ப்ரகாசித்துக் கொண்டுதானிருந்திருக்கிறதென்று நிதர்சனமாகிறது. ஆத்மானுபவம் இல்லாமலே போலி பண்ணிக் கொண்டிருப்பவர்களும், ஞானவழி என்று சொல்லிக் கொண்டே நம்முடைய ஆத்ம சாஸ்த்ரங்களுக்கு வித்யாஸமாக ப்ரசாரம் செய்துகொண்டிருந்த பௌத்தர் முதலானோரும் அப்போது நிறைய இருந்தாலும் கொஞ்சமாவது வைதிகமான ஸத்குருக்களும் ஸம்ப்ரதாய பரம்பரையில் வந்தவர்களாக இருந்துதானிருக்கிறார்கள்.

இப்படியிருந்தவர்களில் அத்யாச்ரமிகளும் இருந்திருக்கிறார்கள், துரீயாச்ரமிகளும் இருந்திருக்கிறார்கள். ஆசார்யாள் குரு முகமாக துரீயாச்ரமம் பெற்றுக்கொள்ள நிச்சயித்தபோது, லோகத்தில் சாஸ்த்ர மரியாதை இருக்கப் பண்ண வேண்டுமென்று நினைத்து, சாஸ்த்ர விதிகளையும் விட்டுவிட்ட அத்யாச்ரமிகளிடம் போகாமல், சாஸ்த்ரோக்தமாக நடக்கும் துரீயாச்ரமியான கோவிந்த பகவத்பாதரிடமே போய் தீக்ஷை வாங்கிக் கொண்டிருக்கிறார்.

இதேமாதிரி கோவிந்த பகவத்பாதரும், கௌட பாதரும் தம்தம் குருக்களிடமிருந்து ஸன்னியாஸம் வாங்கிக் கொண்டவர்கள். சுகர் ஸன்னியாஸி இல்லை. அவர் 'அனுபேத'ராகப் பூணூல் இல்லாமலிருந்தாரென்றால், அது பூணூலை அறுத்துப் போட்டுவிட்டு ஸன்னியாஸியானதால் அல்ல. பூணூல் போடுவதற்கு முன்பே அவர் அத்யாச்ரமியாகப் புறப்பட்டுவிட்டதால்தான்!

கௌட பாதர், கோவிந்த பகவத் பாதர் இருவருமே ஸன்னியாஸிகளாயிருந்தாலும் பின்னவர்தான் ஸன்னியாஸ நாமம் என்று புதிதாக ஒரு பெயர் பெற்றவராயிருக்கிறார்.

அடுத்த புத்தகத்தில்...

ஸ்ரீ சங்கர சரிதம் என்கிற தலைப்பின்கீழ்க் கட்டுரைகள் தொடர்கின்றன.

